# Kanthar Kotta Manimalai

# கந்தர் கோட்ட மணிமாலை

(வள்ளலாரால் 9 வயதில் பாடப்பட்டது)




விளக்கவுரை :

சமரச வேதத்தின் முன்னறிவிப்பாளன்
கிருபானந்தன் பழனிவேலுச்சாமி

Kanthar Kotta Manimalai 1

கந்தர் கோட்ட மணிமாலை 1

திருஓங்கு புண்ணியச் செயல்ஓங்கி அன்பருள்

திறலோங்கு செல்வம்ஓங்கச்

செறிவோங்க அறிவோங்கி நிறைவான இன்பம்

திகழ்ந்தோங்க அருள்கொடுத்து

மருஓங்கு செங்கமல மலர்ஓங்கு வணம்ஓங்க

வளர்கருணை மயம்ஓங்கிஓர்

வரம்ஓங்கு தெள்அமுத வயம்ஓங்கி ஆனந்த

வடிவாகி ஓங்கிஞான

உருவோங்கும் உணர்வின்நிறை
ஒளிவோங்கி ஓங்கும்மயில்

ஊர்ந்தோங்கி எவ்வுயிர்க்கும்

உறவோங்கும் நின்பதம்என்
உளம்வோங்கி வளம்வோங்க

உய்கின்ற நாள்எந்தநாள்

தருவோங்கு சென்னையில் கந்தகோட்
டத்துள்வளர்

தலம்வோங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே.- 1

9 வயது குழந்தையை பூசாரி ஏதாவது பாடு என சொன்னதால் பாட முயற்சிக்கிறது

அதுவோ உய்கின்ற நாள் எந்த நாள்

உய்கின்ற நாள் எந்த நாள் என புலம்புகிறது

வெறும் புலம்பல் மட்டும்தானா என்றால் தன் முற்பிறவியின் ஞான அனுபவத்தை பிழிந்து வழியும் சொல்கிறது

புண்ணியம் செய் நன்மை செய் என்கிறார்களே பாவதோசம் உள்ள மனிதன் நல்லது செய்ய நினைத்தாலும் கெடுதலாகவே முடியும்

ஒருவன் நன்மை செய்யவேண்டுமானால் அவனிடம் இறைவனின் பேரருள் நிறையவேண்டும்

டயருக்கு காற்று அடித்து அடித்து ஓட்டுவதுபோல அனுதினமும் இறைவனிடம் தோடர்பு கொண்டு

இறையருளை ஏதாவது ஒரு வழியில்
நாம் சேர்த்துக்கொண்டே இருக்கவேண்டும்

நித்திய அனுஸ்ட்டானம் இல்லாவிட்டால்
உலகமும் அதன் இருளும் அசுரர்களும்
நம்மை நிரப்பி மேற்கொள்வார்கள்

திரு ஓங்கினால் புண்ணிய செயல்கள்
ஓங்கும்

அப்போது பக்தர்களின் திறன் ஓங்கும்

ஆனால் பக்தர்களின் நிலைமை என்ன

எப்போது பார்த்தாலும் ஏக்க
பெருமூச்சுதானே

யாரையாவது கும்பிடுவதற்கு ரெடி நீதான்
தண்டி என செம்படிக்க ரெடி

எனக்கு எல்லாம் செய்துகொடுங்கள்

மதத்தை பரப்ப ரெடி

ஆனால் உபதேசத்தை கற்றுக்கொள்
உன்னை உயர்த்திக்கொள் என்றால் ஊகூம்
ஊகூம்

மதச்சண்டை போட ரெடி

அடுத்தமத தேவர்களை காரிதுப்ப ரெடி

நாலுபேர்களின் மண்டையை உடைக்கவும்
ரெடி

உன் தகுதியை இறைநிலைக்கு
உயர்த்திக்கொள்

உன் மதகுருமார்களின்
உபதேசங்களிலாவது தெளிந்து தேறு
என்றால் ஊகூம் ஊகூம்

நாங்கள் கும்பிடுகிறோம் அவர் எங்களை
பார்க்கட்டும் என்கிறார்கள்

யாரிடமும் உபதேசத்தை கற்றுக்கொண்டு
அதன்வழி நடந்தால் அறிவு ஓங்கும்

பட்டறிவு செறிய செறிய ஞானசெல்வம் ஓங்கும்

உலகிலும் அருளிலும் நிறைவான இன்பம் ஓங்கும்

நித்திய பரமானந்தம்

களைகள் ஓங்கி சகதி மண்டிய
குளத்தில்தான் செங்கமலம் மலரும்படியும்
வனங்கள் ஓங்கி வளரும்படியும்
இறைவன் அருள்செய்கிறார்

நாளும் நம்மை அரவணைத்து வளர்க்கிற கருணை நம் குற்றம் குறைகளை கண்டு வெறுப்பதில்லை

அவரோடு மயில் ஊர்வதுபோல இசைந்து வளர்ந்தால் வரம் கிடைக்கும்

அமுது கிடைக்கும்

ஞானம் வளர வளர நமது உணர்வில் இறையொளி வளரும்

ஆத்ம உள்ளொளி வளரும்

சிவன் வைரவனாக மாறிய வைரவன்பட்டியில் லிங்கத்தின் பெயர் வளர்ஒளி நாதர்

ஆத்ம உள்ளொளி வளர்ந்து வைரம் விளைவதே ஒளிதேகம்

அப்போது எவ்வுயிர் மீதும் தயவு கருணை உண்டாகி இறைவனின் பதம் அனுபூதி அருள் வளம் சித்திக்கும்

உய்கின்ற வழி

மதவைராக்கியத்தால் வருவதல்ல

மந்திர உச்சாடணத்தால் வருவதல்ல

ஆத்மாவில் இறையொளி ஓங்கட்டும்

உய்கின்ற நாள் அந்த நாள்
உய்கின்ற நாள் அந்த நாள்

Kanthar Kotta Manimalai 2

கந்தர் கோட்ட மணிமாலை 2

பரம்ஏது வினைசெயும் பயன்ஏது
பதிஏது

பசுஏது பாசம்ஏது

பத்திஏ தடைகின்ற முத்திர தருள்ஏது

பாவபுண் யங்கள்ஏது

வரம்ஏது தவம்ஏது விரதம்ஏ
தொன்றும்இலை

மனம்விரும் புணவுண்டுநல்

வத்திரம் அணிந்துமட மாதர்தமை
நாடிநறு

மலர்சூடி விளையாடிமேல்

கரமேவ விட்டுமுலை தொட்டுவாழ்ந் தவரொடு

கலந்துமகிழ் கின்றசுகமே

கண்கண்ட சுகம்இதே கைகண்ட பலன்எனும்

கயவரைக் கூடாதருள்

தரமேவு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 2

பரம் விண்ணுலகம் என்று ஏதேனும் இருக்கிறதா ?

சும்மா அதெல்லாம் கப்சா

இப்ப இருக்கும்போதே அனுபவிச்சு வாழாம எப்பயோ போகப்போற பரலோகத்துக்காக வாழனுமாம்

பாவபுண்ணியம் பார்க்கணுமாம்

செய்யிற செயலுக்கு வினை வந்து சேருமாம்

இன்னொரு பிறவியில வருமாம்

பிள்ளைகுட்டிகளுக்கு வருமாம்

நாம செய்யிறதா நாலுபேருக்கு தெரியாம செய்தா யாருக்கு தெரியும்

திறமையா இருக்கணும் தெரியுமா

போக்கத்த பயலுவ சும்மா சாமி பூதம்னு பேசிட்டு திரியுதுங்க

பெரியார் னு ஒரு சாமி நமக்கு
சொல்லிரிச்சுள்ள ஆரிய பார்ப்பன சதின்னு

பகுத்தறிவுன்னு

நாலு காச பாப்பம்

ஜாலியா அனுபவிப்போம்

பக்தியாம் பக்தி

முக்தியாம் அருளாம்

விரதமாம் தவமாம் வரம்
வாங்குவாங்களாம்

பசு பதி பாசம் னு சித்தாந்த விளக்கம்
சொல்றாங்களாம்

பொழைக்கத்தெரியாத பசங்க
பேசிட்டுத்திரியிதுங்க

மனசுக்கு பிடிக்கிற மாதிரி விதவிதமா
சாப்பிடனும்

அதுவும் நாலுபேர் சேர்ந்து பெருமை பேசிகிட்டே விருந்து கொண்டாடனும்

நல்ல டிரெஸ் போட்டுக்கிடணும்

மனம் கவரும் பெண்கள் உடன் பேசிமகிழனும்

முடிஞ்சா நறுமண மலர்களை அவர்களுக்கு சூட்டி கொஞ்சனும்

கற்பு நெறி கடைபிடிக்காத பெண்களோடு கலந்து மகிழ்கின்ற சுகமே கண்கண்ட சுகம்

கைகண்ட பலன்

பூமியில் வாழ்ந்ததற்கு அர்த்தம்

என்ற கொள்கையுள்ள கயவர்களோடு சேர்ந்து வாழ வேண்டிய சூழ்நிலை வராமல் இறைவா பார்த்துக்கொள்ளுங்கள்

சேர்க்கை தோஷம் நம்மை பாதித்து விடும்

ஆகவேதான் சத்சங்கம் என்ற ஒரு தொடர்பை இருக்கிற இடத்திலே ஏதாவது ஒரு வகையில் வைத்துகொள்ள வேண்டும் என்று முன்னோர்கள் சொன்னார்கள்

உலகத்தில் கெட்டசங்கம் அரட்டை ஆங்காங்கே இல்லாமல் இருக்காது

அது எவ்வளவு இருந்தாலும் தினந்தோறும் ஒரு கோயிலில் போய் அமர்ந்து கொஞ்ச நேரம் தியானித்து பிரார்த்தித்தால் கெட்டதை நல்லது கழுவி விட்டு விடும்

Kanthar Kotta Manimalai 3

கந்தர் கோட்ட மணிமாலை 3

துடிஎன்னும் இடைஅனம் பிடிஎன்னும்
நடைமுகில்

துணைஎனும் பிணையல்அளகம்

சூதென்னும் முலைசெழுந்
தாதென்னும் அலைபுனல்

சுழிஎன்ன மொழிசெய்உந்தி

வடிஎன்னும் விழிநிறையும்
மதிஎன்னும் வதனம்என

மங்கையர்தம் அங்கம்உற்றே

மனம்என்னும் ஒருபாவி
மயல்என்னும் அதுமேவி

மாழ்கநான் வாழ்கஇந்தப்

படிஎன்னும் ஆசையைக் கடிஎன்ன
என்சொல்இப்

படிஎன்ன அறியாதுநின்

படிஎன்ன என்மொழிப் படிஇன்ன
வித்தைநீ

படிஎன்னும் என்செய்குவேன்

தடிதுன்னும் மதில்சென்னை
கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 3

இது ஆசு கவி என்னும் சிக்கலான
இலக்கண அமைப்பு

இருந்தாலும் பாட ஆரம்பித்து விட்டார் 9 வயது வள்ளலார்

இந்த பிறவியில் அவர் துறவி போல வாழப்போகிறவர்

ஆனாலும் முற்பிறவி அனுபவம் நிறைய இருக்கும் போல

சித்தினி என்கிற உடல்வாகு அமைப்புள்ள பெண்கள் துறுதுறுவென ரசனைக்கு உரியவர்கள்

ஒரு இடத்தில் கால் நிற்காது பாவிக்கொண்டே இருக்கும் . உடல் அசைவுகளும் அடவுகளும் முகபாவனைகளும் நாட்டிய கலைபோல சாதாரணமாகவே இருப்பார்கள்

எனக்கு திருமணமான புதிதில் என் மனைவி அழைச்சுகுட்டை என

ஒருவரைப்பற்றி அவ்வப்போது
கமண்டுவதை கேட்டிருக்கிறேன்

அப்புறம் ஒருநாள் அதுயார் என
கேட்டபோது சொன்னார்கள்

அது சித்தினி உடல்வாகு அமைப்புள்ள
ஒருபெண் என்பதையும் அவர்கள்
அறியாமலேயே நாட்டியம் ஆடி
அடுத்தவரை கவருவதால் என் மனைவி
அழைச்சுகுட்டை என்கிற டெக்னிகல்
வார்த்தையை பயன்படுத்தியிருக்கிறார்
என்பதை அறிந்தேன்

இன்றைய அம்மன் படங்கள் சிலைகள்
பல இந்த சித்தினி உடல்வாகுவிலேயே
இருக்கும்

வள்ளல்பெருமானும் மனிதர்களின்
இதயத்தை கவரும் இந்த வடிவமைப்புள்ள

பெண் ஒருவரையே இங்கு வர்ணிக்க
ஆரம்பிக்கிறார்

ஒரு தேர்ந்த கவிஞன் கவிதை
வடிக்கும்போது நேர்த்தி காட்டுவது அவன்
கடமை என்பதால் வர்ணனையை
கலைஞனின் கண் கொண்டு நாமும்
பார்க்க வேண்டும்

சுறு சுறுப்பாக வெட்டி கொண்டிருக்கும்
துடுப்பு போன்ற இடை
அன்னம் தத்தி தத்தி பூமியை
பிடிப்பதுபோன்ரற நடை
மேகம் கூட்டம் ஒன்று மேல் ஒன்று
கவிழ்ந்திருப்பதுபோலவும் விரிந்தும்
படர்ந்தும் கோட்டை மதில் போன்ற
கூந்தல்
கண்ணாமூச்சி ஆடும் மார்பு
செழுமையான இடுப்பு
நீர்ச்சுழி போன்ற உந்தி

வடிப்பான முழி
பௌர்ணமி போன்ற பளிச்சென்ற முகம்

ஆகியவற்றில் மயங்கி மங்கையர்களின்
பிம்பத்தை சுமந்து
அங்கத்தை அளவெடுத்துக்கொண்டே
இருக்குமாம் மனம் என்கிற பாவி
அது மாண்டால் மட்டுமே நான்
வாழமுடியும்

மங்கையர்களின் பிம்பத்தை சுமந்து
அங்கத்தை அளவெடுத்துக்கொண்டே
இருக்கும் மனம் என்கிற பாவி மாளட்டும்
நான் வாழட்டும் என்கிறார் வள்ளலார்

பெண்கள் திரிபுரசுந்தரி ஆகிய
அன்னையின் பல்வகை அம்சங்கள்

அவர்கள் அழகாக இருப்பது ஆர்களது
இயல்பு

பிரச்சினை அவர்களின் அழகில் இல்லை

அந்த அழகியலை ஆண்களின் மனம் பிம்பமாக இதயத்தில் சுமந்து அதை அளவெடுத்துக்கொண்டே இருக்கிறதே அதில்தான் பிரச்சினை இருக்கிறது

பார்க்கிற பெண்களை எல்லாம் அவர்கள் கடந்துபோன பின்பும் இதயத்தில் சுமந்துகொண்டு திரிவதில்தான் பிரச்சினை இருக்கிறது

பெண்களை சுமக்காத மனம் ஆண்கள் அடைய வேண்டிய ஒரு முக்தி

ஒரு படி

பெண்ணாசையை கடந்த முக்தி நிலை இது

ஒழுங்கை கடைபிடி என்பது சரி என்றாலும் வம்பாக ஒழுங்கை கடைபிடிப்பது வளர்ச்சியே அல்ல

பெண்களால் பாதிக்கப்படாத நிலையை நீ அடையவேண்டும் என முருகன் வள்ளலாரிடம் சொன்னாராம்

பெண்களால் பாதிக்கப்படாத படிநிலையை அடையாது ஆசையை அடக்கு என்ற நிலையிலேயே நீ இருப்பதால் முன்னேற்றம் இல்லை என்பதை நீ உணராதிருப்பது என்ன என முருகன் வள்ளலாரிடம் கேட்டாராம்

Kanthar Kotta Manimalai 4

கந்தர் கோட்ட மணிமாலை 4

வள்ளல்உனை உள்ளபடி வாழ்த்துகின்
றோர்தமை

மதித்திடுவ தன்றிமற்றை

வானவரை மதிஎன்னில் நான்அவரை
ஒருகனவின்

மாட்டினும் மறந்தும்மதியேன்

கள்ளம்அறும் உள்ளம்உறும்
நின்பதம்அ லால்வேறு

கடவுளர் பதத்தைஅவர்என்

கண்எதிர் அடுத்தைய நண்என
அளிப்பினும்

கடுஎன வெறுத்துநிற்பேன்

எள்ளளவும் இம்மொழியி லேசுமொழி அன்றுண்மை

என்னை ஆண் டருள்புரிகுவாய்

என்தந்தை யேஎனது தாயேஎன் இன்பமே

என்றன்அறி வேஎன்அன்பே

தள்ளரிய சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 4

வள்ளல் பெருமான் சிவனால் திருவடி தீட்சை வழங்கப்பெற்ற பிறகு சிவ

வழிபாட்டில் இருந்து அருட்பெருஞ்சோதி வழிபாட்டுக்கு மாறினார்

அந்த அருட்பெருஞ்சோதி இசுலாத்தில் சொல்லப்படும் அருவ இறைவன் என்பதும் அல்லா என்பதும் வள்ளலாருக்கு நன்கு தெரியும்

ஆனாலும் மதச்சாயம் உண்டாகி கேடுகள் விளையும் என்பதால் அருட்பெருஞ்சோதி என அடையாளப்படுத்தினார்

இசுலாத்தின் மந்திரமான கலிமாவை கொஞ்சம் மாற்றி சன்மார்க்க மந்திரமாக கொடுத்தார்

அவன் அளவற்ற அருளாளன்
நிகரற்ற அன்புடையோன் என்பது
இசுலாத்தின் மந்திரம்

அளவற்ற அருளாளன் என்பதை
அருட்பெருஞ்சோதி என்றார்

நிகரற்ற அன்புடையோன் என்பதை தனிப்பெருங்கருணை என்றார்

வள்ளலாரின் இன்னொரு அம்சமான சாலை ஆண்டவரும் பிரணவமே அருட்கலிமாவாகும் என உறுதிபடுத்தியுள்ளார்

அல்லா என்ற அரபு வார்த்தைக்கு அர்த்தம் கடவுள் இறைவன் என்ற பொது அர்த்தமாகும்

அருவ ஏக இறைவனை வழிபடுவது என்ற உண்மையைத்தவிர மற்ற அராபிய கலாச்சார பண்பாடுகளை இசுலாம் மதம் என்பதாக உள்ளது

அதில் அராபிய தன்மையை ஒதுக்கிவைத்துவிட்டு இந்துக்களாக இருந்துகொண்டே அருவ இறைவனை

வணங்கலாம் என்பதை இந்திய இசுலாமியர் உணரவேண்டும்

அராபிய அடையாளங்கள் உங்களை அந்நியப்படுத்துகிறது

இந்திய உறவிணர்களைவிட்டு ஏன் ஒதுங்கவேண்டும்

இறைவன் முக்கியமே தவிர அராபிய அடையாளம் அவசியமற்றது

ஏக அருவ இறைவனை வணங்க சரியான மார்க்கம் வள்ளலாரின் சன்மார்க்கமாகும்

9 வயதில் கந்தர்கோட்ட முருகன் கோவிலில் வள்ளலார் நின்றுகொண்டிருக்கும் போது அலங்காரம் செய்யும்வரை யாராவது பாடுங்களேன் என பூசாரி கேட்டதால் 31 பாடல்கள் தன்னையறியாமல் பாடினார்

அருளால் பாடிய இப்பாடல்களில் முந்திய பிறவி ஞானம் உண்மை
வெளிப்பட்டுள்ளது

அருவ ஏக இறைவனை வழிபடுவதன்றி அவரது தேவர்களை மட்டும் வழிபடு மதி என்றால் கனவில் கூட மதிக்கமாட்டேன்

அந்த தேவர்கள் ஏன் கண்ணெதிரே வந்து நன்மைகள் பல கொடுக்கிறேன் என்றாலும் அவர்களை மட்டும் மதித்து விட்டு
உருவம் அற்ற இறைவனை வழிபடாமல்
இரு என்றால் இருக்கமாட்டேன்

Kanthar Kotta Manimalai 5

கந்தர் கோட்ட மணிமாலை 5

பதிபூசை முதலநற் கிரியையால் மனம்எனும்

பசுகரணம் ஈங்கசுத்த

பாவனை அறச்சுத்த பாவனையில் நிற்கும்மெய்ப்

பதியோக நிலைமைஅதனால்

மதிபாசம் அற்றதின் அடங்கிடும் அடங்கவே

மலைவில்மெய்ஞ் ஞானமயமாய்

வரவுபோக் கற்றநிலை கூடும்என எனதுளே

வந்துணர்வு தந்தகுருவே

துதிவாய்மை பெறுசாந்த பதம்மேவு மதியமே

துரிசறு சுயஞ்சோதியே

தோகைவா கனமீ திலங்கவரு தோன்றலே

சொல்லரிய நல்லதுணையே

ததிபெறும் சென்னையில• கந்தகோட் டத்துள்வளர்

தலமோங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 5

ஞான சற்குரு முருகன் வள்ளலாருக்கு தெளிந்த உணர்வை கொடுத்தாராம் . என்ன தெளிவு ?

வள்ளல்பிரான் சைவமார்க்கத்தில் பிறந்து வளர்ந்தவர் . குடும்ப சூழலில் அந்த சித்தாந்தம் அவருக்கு தெரிந்திருக்கும் .

நல்ல குரு ஏற்கனவே வளர்ந்ததை அழித்து விடு ; மார்க்கம் மாறிவிடு ; இனம் மாறி வேறொரு இனத்தினரின் பெயரை வைத்துக்கொள் ; உன் தாத்தன் பூட்டன் பெயரை மறந்து விட்டு யாரென்றே தெரியாத ஆப்ரகாம் ஈசாக்கு யாக்கோபு இஸ்மாயில் என யூதர்களின் அரபியர்களின் பெயரை தாத்தன் பூட்டனாக சொல்லு என்றெல்லாம் சொல்லமாட்டார்

இருக்கிற இடத்திலிருந்தே கடவுளை நோக்கி பாதை காட்டி அருளுவார்

சைவமரபிலே பசு பதி பாசம் என்பதை சொல்லித்தந்திருப்பார்கள்

பசுவாகிய மனிதர்களை மனித ஆத்மாக்களை பாசம் என்னும் பிறவிக்கடலில் இருந்து ரட்சித்து கடவுளை காட்டியருளும் குருவாக சிவனை பதியாக பற்றிக்கொள்

உலக பாசத்திலிருந்து சிவகுருவின் மீது பாசத்தை வளர்த்துக்கொண்டால் பாசம் என்னும் பந்தத்திலிருந்து விடுபடுவாய் என்பார்கள்

வள்ளல்பிரானிடம் சிவகுருவாக வந்த முருகன் ; நிலைக்கண்ணாடியில் தன்னை காட்டியருளிய முருகன் பசு பதி பாசத்திலிருந்தே உபதேசத்தை தொடங்கினாராம்

பதிபூசை முதலநற் கிரியையால் மனம்எனும்
பசு சுத்த பாவனை ஆகும் கரணம் ஈங்கமாகும்

பதியாகிய சிவபூஜை செய்வதால் மனம் என்னும் பசு சுத்தமாகும் . மனதோடு சேர்ந்து இயங்கும் மனதை கெடுக்கும் ஐம்புலன்கள் ஈங்கமாகும் .

ஞானிகள் பேசுகிற பாஷையால் தமிழ் விளங்கும் . தங்கம் வலிவு இல்லாதது . நகையாக அணியமுடியாது . நகை செய்யவேண்டுமானால் அதில் செம்பை அளவோடு கலக்கவேண்டும் . அப்படி கலந்த தங்கத்தை தங்கநகை ஆபரணம் என்கிறோம் . ஆனால் ஆபரணத்தை ஈங்கம் என்கிறார்

வள்ளலார்

தங்கம் செம்பு கலந்தால் ஈங்கம் .
இந்த ஈங்கம் வலிமை பெற்று
ஆபரணமாக மகிமை அடைகிறது .
அதுபோல மனமது செம்மையாகும்
போது சுத்த பாவனையும் உடலும்
பொன்னைப்போல பிரகாசமடைகிறது
. பொழிவடைகிறது

ஆனால் ஆனால் பதியானவரோ அந்த
சுத்த பாவனையையும் கடந்தவர் .

மனிதன் முதலில் சுத்த பாவனை
அடையவேண்டும் . பிறகோ அந்த
பாவனையையும் கடந்து
விடவேண்டும்

தீமையிலிருந்து நன்மைக்கு
மாறவேண்டும் பிறகோ நன்மை

தீமை என்பதையும்
கடந்துவிடவேண்டும் இருள் சேர் இரு
வினையும் சேரா இறைவன் .
நன்மையையும் கூட ஒரு இருளே .

இறைதூதர்களோ அவதாரங்களோ தீய
இயல்புள்ளவர்களை வெறுத்ததோ
விலகி நின்றதோ இல்லை .
அவர்களிலிருந்து தங்களை
மேம்பட்டவர்களாக
வித்தியாசப்படுத்தியும்
காண்பித்ததில்லை

என்னை பாவிகளின் தோழன்
என்கிறார்கள் ; மனம் திரும்ப
அவசியமில்லாத 99
நீதிமான்களைக்காட்டிலும் மனம்
திருந்துகிற ஒரே ஒரு பாவியின்
நிமித்தம் பரலோகம் மிகுந்த
சந்தோசமடையும் என்றார் சற்குரு

இயேசு .தேவ அன்பை ருசி
பார்த்தவர்கள் யாரும் தீயவர்களை
அருவெறுக்க மாட்டார்கள்

இறைவன் நல்லோர்க்கும்
பொல்லோர்க்கும் நடு நிற்பவர்

சுத்த பாவனை அறச்சுத்த
பாவனையில் நிற்கும்மெய்ப்
பதி

சுத்தம் அந்த சுத்தத்தையும் கடந்த
நிலை பரிகரித்த நிலை பரிசுத்தம்

நன்மை தீமை என உணர்ந்து
நன்மையில் நின்றால் அது சுத்தம்
நன்மை தீமையையும் கடந்து
விட்டாலோ பரிசுத்தம் மதி பாசம்
அற்று அடங்கிய நிலை

மதிபாசம் அற்றதின் அடங்கிடும்

அடங்கவே
மலைவில்மெய்ஞ் ஞானமயமாய்
வரவுபோக் கற்றநிலை கூடும்என
எனதுளே
வந்துணர்வு தந்தகுருவே

இருமையை கடந்த நிலை வரவு
போக்கற்ற நிலை எதனாலும்
பாதிப்பில்லாத நிலை கைகூடினால்
மெய்ஞானம் விளங்கும்

அது குன்றின் மீது ஒளிரும்
விளக்கை போல தனக்கும்
சமூகத்திற்கும் பலனளிக்க கூடியது

மத்தேயு 5

1. அவர் திரளான ஜனங்களைக் கண்டு
மலையின் மேல் ஏறினார்; அவர்
உட்கார்ந்தபொழுது, அவருடைய

சீஷர்கள் அவரிடத்தில் வந்தார்கள்.

2. அப்பொழுது அவர் தமது வாயைத் திறந்து அவர்களுக்கு உபதேசித்துச் சொன்னது என்னவென்றால்:

3. ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள்; பரலோகராஜ்யம் அவர்களுடையது.

4. துயரப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் ஆறுதலடைவார்கள்.

5. சாந்தகுணமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

6. நீதியின்மேல் பசிதாகமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள்

திருப்தியடைவார்கள்.

7. இரக்கமுடையவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் இரக்கம் பெறுவார்கள்.

8. இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்.

9. சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் என்னப்படுவார்கள்.

10. நீதியினிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; பரலோகராஜ்யம் அவர்களுடையது.
14. நீங்கள் உலகத்துக்கு

வெளிச்சமாயிருக்கிறீர்கள்; மலையின் மேல் இருக்கிற பட்டணம் மறைந்திருக்கமாட்டாது.

15. விளக்கைக் கொளுத்தி மரக்காலால் மூடிவைக்காமல், விளக்குத் தண்டின்மேல் வைப்பார்கள்; அப்பொழுது அது வீட்டிலுள்ள யாவருக்கும் வெளிச்சம் கொடுக்கும். என்பது இயேசுவின் உபதேசமாகும்

முருகன் வள்ளலாருக்கு சைவ சித்தாந்தம் முதல் இயேசுவின் உபதேசம் வரை காட்டுக்கொடுத்தார் என்பதே இங்கு சுட்டப்படுகிறது

Kanthar Kotta Manimalai 6

கந்தர் கோட்ட மணிமாலை 6

காமஉட் பகைவனும் கோபவெங் கொடியனும்

கனலோப முழுமூடனும்

கடுமோக வீணனும் கொடுமதம் எனுந்துட்ட

கண்கெட்ட ஆங்காரியும்

ஏமம்அறு மாச்சரிய விழலனும் கொலைஎன்

றியம்புபா தகனுமாம்இவ்

வெழுவரும் இவர்க்குற்ற உறவான பேர்களும்

எனைப்பற்றி டாமல்அருள்வாய்

சேமமிகு மாமறையின் ஓம்எனும்
அருட்பதத்

திறன்அருளி மலயமுனிவன்

சிந்தனையின் வந்தனைஉ
வந்தமெய்ஞ் ஞானசிவ

தேசிக சிகாரத்னமே

தாமம்ஒளிர் சென்னையில் கந்தகோட்
டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகர்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 6

பஞ்சமாபாதகம் என்று
கேள்விப்பட்டிருப்போம் . ஆனால்
வள்ளலோ ஏழு - சப்தபாதகம் என்கிறார் .

காமம், கோபம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் ; இவைகளுடன் கொலை ஆகிய ஏழு பாதகங்கள் மற்றும் இவைகளோடு கூடிய அநேக தீய இயல்புகள் எனைப்பற்றிடாமல் சற்குரு முருகன் காத்துக்கொள்ளவேண்டுமாம் .

காமம் நமது உள் பகைவன் . கூடவே இருந்து அவ்வப்போது தலைகாட்டி கழுத்தை அறுப்பவன்

கோபமோ வெங்கொடியவன் . சட்டென்று கோபம் வந்து ஆட்டம் ஆடிவிடுவோம் . பிறகுபார்த்தால் நாம் கோபப்பட்டது தவறு என தெரியும்

பேராசை அளவுக்கதிகமாக அவதிப்படுவது - முழு மூடத்தனம்

இறைவன் போதிய அளவு கையைத்திறப்பார் . இல்லை எனது கொடுப்பார் . நம்மை இயலாமையில் இல்லாமையில் தவிக்க விடமாட்டார் என பலமுறை உணர்ந்தாலும் காசு விசயத்தில் கவலை சேர்த்துவைக்கவில்லையோ என நினைப்பது ; சுபசெலவு செய்ய தயங்குவது .

வீணான மோகம் . இனக்கவர்ச்சி என்பது ஒரு சாபம் . நம் ஆத்மா ஆணாகவோ இல்லை பெண்ணாகவோ இல்லை

சரீரத்திலோ நாம் ஆணாக இருந்தாலும் பெண்ணாகவும் மாறி மாறித்தான் பிறந்தும் வருகிறோம்

ஆண் பெண் பேதம் கடரப்படவேண்டியதே தவிர மறு பாலினத்தை எவ்வளவுதான் ரசித்தாலும் ருசித்தாலும் ஒன்றையும்

அடையப்போவதில்லை . திருப்தி அடையப்போவதில்லை

மோகம் வீணானது

மதவெறி கண்கெட்ட ஆங்காரம்

உலகம் முழுவதும் உள்ள பலவகை இனங்களும் இறைவனால் படைக்கப்பட்டவையே

உலகம் முழுவதும் இன்று வளர்ந்துள்ள பலவகை இறைநெறிகளும் மனிதர்களை நல்வழிப்படுத்த இறைவனிடமிருந்து வந்தவையே என்ற பொதுப்பார்வை கண்கேட்டுப்போனதால் மதவெறி வருகிறது .

நம் மதத்தை வளர்க்கலாமே தவிர அடுத்த மதத்தை துவேசிக்க கூடாது. நம் மத

தேவர்களை தலையில் தூக்கி வைத்து ஆடி அடுத்த மத தேவர்களை காறித்துப்பினால் நம் மத தேவர்களும் நம்மை விட்டு விலகிவிடுவார்கள்

ஏனெனில் தேவர்களுக்குள் பிரிவினை இல்லை

இறைவன் ஏகர் . இறை பேரரசில் உள்ள பலவகையான தேவர்களும் ஒருவர்க்கு ஒருவர் ஒற்றுமையாக ஏகமாகத்தான் உள்ளனர்

பரஸ்பர அன்பு , நல்லிணக்கம் தேவ குணங்களில் ஒன்று
வெறுப்பு பேதம் என்பது அசுர குணம்

ஏகத்தை ; நல்லிணக்கத்தை மறுக்கும் மாச்சர்யம் விழலுக்கு இறைக்கும் நீர் போன்றது

ஜீவகாருண்யம் ; இறக்கம் ; அன்பு என்பதை மிருகங்களை கொல்லாமல் இருப்பது ; சைவ உணவு மட்டும் சாப்பிடுவது என்பதாக மேலோட்டமாக கருதிக்கொள்கிறோம்

எந்த உணவு என்பது சடங்கு . அடையாளம் மட்டுமே

ஆனால் உள்ளார்ந்து இருக்கும் விஷயம் கொல்லாமை

விலங்குகளை கொல்லாமை புலால் உண்ணாமையை விட முக்கியத்துவமான விஷயம் மனிதர்களை கொல்லாமை

மனிதர்களை அவமதிப்பதே இறைவனுக்கு விரோதமான பெரும் பாவம்

மனிதன் ஒருவனே இறைவனின் சாயலில்

உள்ளவன்

மனிதனை அவமதித்தால் அவனின் சாயலில் உள்ள இறைவனையும் அவமதிக்கிறோம்

தூய இறைபக்தி இறைவனின் சாயலில் உள்ள மனிதர்களை எக்காரணம் கொண்டும் அவமதிக்காது

மதங்களின் காரணமாக அடுத்த மதத்தினரை கொல்லலாம் ; சுவர்க்கம் கிடைக்கும் ; தர்மயுத்தம் என்பதெல்லாம் இறைவனை உணராத சீடர்கள் விளக்கம் கொடுத்தது

எந்த இறை தூதரும் ; ஞானியும் அடுத்த மதத்தினரை கொன்றால் புண்ணியம் என்று சொல்லவே இல்லை . அப்படிப்பட்டவர்களை வள்ளலால்

பெருமான் பாதகன் என்கிறார்

வேறுவேறு தேசத்தில் வந்ததால் மதங்கள் வேற்றுமை உள்ளவையாக உள்ளன

ஆனால் மதங்களின் வேற்றுமைகளுக்கிடையில் ஒற்றுமையை உண்டாக்கும் சமரச வேதமும் சமரச வேதாந்தியும் இறைவன் புறத்திலிருந்து வந்த பிறகே கலியுகம் முடிவுக்கு கொண்டுவரப்படும்

சத்திய யுகமும் இறைபேரரசும் வரப்போவதை உணர்ந்த இறைபற்றாளர்கள் தங்கள் மதத்தை அழியவிடாமல் காப்பார்களே தவிர மற்ற மதங்களை வெறுக்கமாட்டார்கள்

சேமமிகு மாமறையின் ஓம்எனும் அருட்பதத்

திறன்அருளி மலயமுனிவன்
சிந்தனையின் வந்தனைஉ வந்தமெய்ஞ்
ஞானசிவ
தேசிக சிகாரத்னமே

சேமத்தை அளிக்கும் மா மறைகள் பல
உலகம் முழுதும் பகுதி பகுதியாக
ஆங்காங்கு வெளியாக்கப்பட்டுள்ளன
.வேற்றுமை போல தெரியும் அவை
ஏமத்தை ஏக இறை நெறியை
மறைமுகமாக . அவைகளின் ஊடாக
போதிக்கின்றன . ஏகத்தின் அருட்பதமே
ஓம் .

அந்தோ அந்த ஓம் ன் அர்த்தத்தை சிவன்
முதலான அனைத்து தேவர்களும்
மனிதர்களும் மறந்தல்லவோ போனார்கள் .
மலை முனிவன் சிவனுக்கு
முருகனல்லோ ஓம் என்ற பதத்தின்
அர்த்தத்தை உபதேசித்தார்

இன்றைய மனிதர்களும் ஓம் என்பதன் அர்த்தம் அறியாமல் ஏதோதோ பிதற்றுவார் . அல்லது சிவனுக்கு முருகன் உபதேசித்து விட்டார் என்பதை தெரிந்திருப்பதையே ஓம் க்கு அர்த்தம் அறிந்ததுபோல நம்பிக்கொள்வார் .

ஓம் என்ற பதத்தின் அர்த்தம் ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம் என்பதாம் ஓரிறைவனையே துதிக்கிறோம் என்பதாம்

வானமண்டலத்திலும் பால்வெளியிலும் அனைத்து தேவர்களும் படைப்புகளும் ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம் ஓரிறைவனையே துதிக்கிறோம் என்று மனதாலும் உணர்வாலும் துதிக்கும் சத்தமே பிரணவ மந்திரமாக சுற்றி சுழன்று வருகிறது

நாராயணனாக வெளிப்பட்ட
ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ நாராயணனாய

ஆதிசேஷனாக வெளிப்பட்ட
ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ ஆதிசேஷாய

நாராயணியாக வெளிப்பட்ட
ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ நாராயண்யாய

சிவனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே
நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ சிவாய

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

Kanthar Kotta Manimalai 7

## கந்தர் கோட்ட மணிமாலை 7

நிலைஉறும் நிராசையாம் உயர்குலப்
பெண்டிரொடு

நிகழ்சாந்த மாம்புதல்வனும்

நெறிபெறும் உதாரகுணம் என்னும்நற்
பொருளும்மருள்

நீக்கும்அறி வாம்துணைவனும்

மலைவறு நிராங்கார நண்பனும்
சுத்தமுறு

மனம்என்னும் நல்ஏவலும்

வருசகல கேவலம்இ லாதஇட
மும்பெற்று

வாழ்கின்ற வாழ்வருளுவாய்

அலைஇலாச் சிவஞான வாரியே
ஆனந்த

அமுதமே குமுதமலர்வாய்

அணிகொள்பொற் கொடிபசுங்
கொடிஇரு புறம்படர்ந்

தழகுபெற வருபொன்மலையே

தலைவர்புகழ் சென்னையில்
கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

## சண்முகத் தெய்வமணியே. - 7

உயர்ந்த பண்பாடு உள்ள மனைவி ;
சற்குனமுள்ள பிள்ளைகள் : உதாரணமான
நல்வழியில் ஈட்டிய பொருள் ;
மாயைகளை போக்கும் அறிவாகிய
உதவியாளர்கள் ; மலை அளவு
ஆங்காரத்தையும் அமர்த்தி
நல்வழிப்படுத்தும் நண்பர்கள் ; சுத்தமான
காரியங்களில் ஏவும மனமும் ; எந்த
கேவலமும் வராத சமூக மதிப்பும் பெற்று
வாழ்கின்ற நல்வாழ்வை அருளுவாயாக

மனம் கொந்தளிக்காத தெளிவை அருளும்
சிவஞான கடலே
அமுதமான வார்த்தைகளால் வரும்
பேரானந்தமே
அல்லிமலரைப்போன்ற வாயும் அழகிய
ஆபரணங்களை அணிந்த பொற்கொடியும்

பசுங்கொடியும் போன்ற துணைவியார் இருவர் சூழ்ந்து வர அருள்பாலிக்கின்ற பொன்மலையே

Kanthar Kotta Manimalai 8

கந்தர் கோட்ட மணிமாலை 8

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற

உத்தமர்தம் உறவுவேண்டும்

உள்ஒன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்

உறவுகல வாமைவேண்டும்

பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண் டும்பொய்மை

பேசா திருக்க்வேண்டும்

பெருநெறி பிடித்தொழுக
வேண்டும்மத மானபேய்

பிடியா திருக்கவேண்டும்

மருவுபெண் ஆசையை மறக்கவே
வேண்டும்உனை

மறவா திருக்கவேண்டும்

மதிவேண்டும் நின்கருணை
நிதிவேண்டும் நோயற்ற

வாழ்வில்நான் வாழவேண்டும்

தருமமிகு சென்னையில் கந்தகோட்
டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 8

ஒருமை என்பது ஒரே என்ற அர்த்தம் உடையது அல்ல

ஒற்றுமை ; வேற்றுமையில் ஒற்றுமையாக அனைத்து மார்க்கங்களும் மதங்களும் அந்த ஒரே இறைவனை நோக்கியே பல பாதைகளில் முன்னேறிக்கொண்டுள்ளன என்ற புரிதல் உள்ள உத்தமர்கள் உறவு வேண்டும்

இதை பெருநெறி என்கிறார் வள்ளல்பெருமான்

காலம்காலமாக அருளாளர்கள் சமூகத்தை இறைவனை நோக்கியே நகர்த்தி விட்டுக்கொண்டிருக்கிறார்கள்

இன்றைக்கு நகர்த்தி விட வேண்டிய படியைப்பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருந்தாலும் இந்தப்படி நிரந்தரமானதல்ல என்ற தெளிவு அவர்களுக்கு இருந்தது

தாங்கள் பிறந்த மதத்தில் இருந்தார்கள் ; அடுத்த மதங்களை துவேசிக்காமல் இருந்தார்கள்

போட்டியாக உள்ள மதங்களின் உண்மைகளை கண்டறிந்து அவைகளை தங்கள் மதத்தில் கலந்து செழுமைப்படுத்தியவர்களே தங்கள் மதத்தை வளர்த்திருக்கிறார்கள்

அடுத்த மதங்களை துவேசித்தவர்களாலோ ; அடுத்த மதங்களை அழிக்க நினைத்தவர்களாலோ அவர்களின்

மதம் வளர்ந்ததே இல்லை

மத துவேசிகளால் எந்த மதமும் வளர்ந்ததே இல்லை

அடுத்த மதத்தை அழிப்பதால் எந்த பலனும் விளையப்போவதில்லை

அடுத்த மதத்தின் உண்மையை நாம் உறிஞ்சிக்கொண்டால் ; அது நமக்கு தீங்கு செய்ய சக்தி அற்றுப்போய் விடும்

சைவமும் வைணவமும் சமணர்களுடன் போட்டியிட முடியாமல் தோற்றுப்போன காலம் ஒன்று இந்தியாவில் இருந்தது

அரசுகள் அனைத்தும் சமண மதத்தின் ஆழுகையில் இருந்தன

அதில் முதன்முதலாக சைவத்திற்கு புத்தியிர்ப்பை உண்டாக்கியவர் திருநாவுக்கரசர்

அவர் நோய்வாய்ப்பட்டிருந்த வரகுணபாண்டிய மன்னனை குணப்படுத்தியவுடன் சைவ சமயம் அரச மதமாக அறிவிக்கப்படவில்லை

வழக்கம் போல வாதிலே சமணர்களை வெல்லவேண்டி வந்தது

அது தத்துவ வாதாக மட்டுமில்லை ; அக்கால வழக்கப்படி வைகையில் ஏடு விடவேண்டும்

அந்த ஏடு வைகையை எதிர்த்து நீந்த வேண்டும்

திருநாவுக்கரசர் விட்ட ஏடு

எதிர்த்திசையில் நீந்தி கரையேறிய இடம் திருவேடகம் . இன்று அங்கு ராமகிருஷ்ண தபோவனம் இருக்கிறது

நான் முக்கியமாக சொல்ல வருவது ; அதற்கு முன்பும் பல சைவர்கள் சைவத்தின் மீதுள்ள அக்கறையால் போட்டி இட்டார்கள் . தோற்றார்கள் ; கழுவேற்றப்பட்டார்கள்

சமணர்களை வெல்ல முடியாத போட்டிகள் பல நடந்தன

இதில் திருநாவுக்கரசர் மட்டும் எப்படி வென்றார் ?

ஒரே ஒரு பதில் ; அதற்கு முன்பு சமணத்துறவியாக தர்மசேனர் என்ற பெயரில் சமண பள்ளிகளில் பல பயிற்சிகள் கற்றவர் திருநாவுக்கரசர் .

சமண மதத்தின் சகல
ரகசியங்களையும் கற்றுத்தேறி
சைவத்திற்கு மாறிவந்த
திருநாவுக்கரசர் சமணத்தை
வென்றதன் பின்னணி அதன்
உண்மைகள் திருநாவுக்கரசருக்கு
அத்துப்படி என்பதாகும்

அப்படியில்லாமல் இன்றைய
விருட்டாங்குஞ்சுகளை போல
வெறும் வேகம் மட்டும்
வைத்துக்கொண்டு சமணத்தை
வெறுத்து அழிக்க நினைத்தவர்கள்
சமணத்தோடு தோற்று
அழிந்துபோனார்கள்

சமணத்தை கரைத்துக்குடித்த
திருநாவுக்கரசர் சமணத்தை வென்று
சைவத்திற்கு புத்துயிர் கொடுத்தார்

இதுவே இந்து மதம் வளர்ந்து வந்த பாதை

இன்றைய மதரட்சகர்களால் இந்து மதம் ஒரு தம்பிடி கூட வளராது

வள்ளல்பிரான் எதற்காக பூமிக்கு அனுப்பபட்டாரோ ; அது உலகம் முழுவதும் சகல மதங்களையும் சமரசப்படுத்தி சமாதானத்தை நிலைநாட்டும் பணி வள்ளலாரின் சீடர்களுக்கு இருக்கிறது

அந்தப்பெரு நெறி ; சகல மதங்களையும் ஒதுக்கிவிட்டு புது மதத்தை உறபத்தி செய்வதல்ல

சகல மதங்களின் மூலமாக வெளிப்பட்டுள்ள உண்மைகளை

உள்ளபடி அங்கீகரித்து பொதுநோக்கு சமரச சமாதானத்தை உறபத்தி செய்வதாகும்

வள்ளலாரின் பின்வரப்போகிறவர் சமரச வேதாந்தி என்பதை அறிக

அவரை வரவேற்று பிரார்த்தனை செய்வது வள்ளலாரின் இதயத்தை உணர்ந்தோரின் பணியாகும்

Kanthar Kotta Manimalai 9

# கந்தர் கோட்ட மணிமாலை 9

ஈஎன்று நான்ஒருவர் இடம்நின்று கேளாத

இயல்பும்என் னிடம்ஒருவர்ஈ

திடுஎன்ற போதவர்க் கிலைஎன்று சொல்லாமல்

இடுகின்ற திறமும்இறையாம்

நீஎன்றும் எனைவிடா நிலையும்நான் என்றும்உள

நினைவிடா நெறியும்அயலார்

நிதிஒன்றும் நயவாத மனமும்மெய்ந் நிலைநின்று

நெகிழாத திடமும்உலகில்

சீஎன்று பேய்என்று நாய்என்று பிறர்தமைத்

தீங்குசொல் லாததெளிவும்

திரம்ஒன்று வாய்மையும் து'ய்மையும் தந்துநின்

திருவடிக் காளாக்குவாய்

தாய்ஒன்று சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 9

தேவைகள் உலக வாழ்வுக்கான
தேவைகள் மிக குறைந்த பட்ச
தேவைகள் நிறைவேறப்படாமல்
இப்பூமியில் வாழமுடியாது

உணவு உடை இருப்பிடம்
இம்மூன்றாவது பூர்த்தியானால்
மட்டுமே மனிதன் ஆன்ம வாழ்வில்
பயணித்து சாதனைகள்
செய்யமுடியும்

வள்ளலாரை படிப்பித்து
ஆளாக்கும்படியாக அவரது
பெற்றோர்கள் அண்ணன்
சபாபதியிடம் சென்னைக்கு அனுப்ப
அவரை ப்ராட்வேயில் வாழ்ந்த
பச்சையப்ப முதலியாரிடம் தமிழ்
இலக்கணம் கற்கச் சேர்க்கப்
பட்டார்.அப்போது அவருக்கு ஒன்பது
வயது. இடைவெளியில் அடிக்கடி

அவர் காணாமல் போவிடுவார்.நண்பர்கள் அவரைத் தேடிக் கொணர்வது வழக்கம். இந்தச் செயல்பற்றி அவரது அண்ணன் சபாபதிக்குச் செய்தி சொல்லப்பட்டது. ஒரு நாள் அண்ணன் மறைவில் இருந்து தம்பியைக் கண்காணித்தார்.

இடைவெளியில் இராமலிங்கம் விடுவிடு என பூங்கா பகுதியில் உள்ள கந்தர் கோட்டத்துக்குள் செல்கிறார். முன்னூறு வருடங்கள் பழமைமிக்க முருகன் ஸ்தலம் கந்தர் கோட்டம்! கோயிலுக்குள் சென்று நேரே முருகன் முன் தூண் ஓரம் நிற்பதும், வாயால் ஏதோ முனுமுனுப்பதுமாக இருக்கிறார், பின் வந்து விடுகிறார்.அன்று மாலை இராமலிங்கத்துக்கு அடியோ அடி!

மறுநாளும் இதே போல் கந்தர்கோட்டம் போய் விட்டார், இப்போது பச்சையப்ப முதலியாரே அவர் பின் சென்று கவனிக்க, யாரோ அபிஷேகக் கட்டளைக்கு தந்திருக்கும் வேளையில், அர்ச்சகர் ”யாராவது பாடுங்களேன்” என்று மூலஸ்தானத்தில் இருந்து ஒரல் எழுப்ப, ஒன்பது வயது இராமலிங்கம் அப்போது ஆசுகவியாய் தமிழ்த்தெய்வத்தின் கருணையால் வாய்மலர்ந்தது தான் கந்தர்கோட்ட தெய்வமணி மாலையின் முதல் மணி . திருவோங்கு எனத்தொடங்கும் பாடல் .

ஆசுகவி என்பது மிக சிக்கலான இலக்கண அமைப்பு கொண்டது . கற்றறிந்த பண்டிதர்களுக்கே உரிய

நேர்த்தியோடு அக்கவி வெளிப்படவும் பச்சையப்ப முதலியார் கற்பிப்பதற்கு அப்பாற்பட்ட தெய்வப்பேறு உள்ள குழந்தை இது என்பதை புரிந்துகொண்டார் . சபாபதியிடம் இதை புரியவைக்க முயற்சித்தார் . இந்த குழந்தைக்கு கல்வி கற்பிக்கும் தகுதி தனக்கில்லை என கூறிவிட்டார்

இதன் தாத்பர்யம் என்னவென்று புரியாமல் தன் கை மீறிய தம்பியை பற்றி கவலைப்படுவதால் பலனில்லை என்பதாக ஒரு முடிவெடுத்து எக்கேடும் கேட்டுப்போ என்கிற அளவில் வள்ளலாரை கண்டு கொள்ளாமல் இருக்கத்தொடங்கி விட்டார் சபாபதி

பள்ளியும் போகாமல் காலையில் வெளியே போவதும் இரவு வந்து

தூங்க வருவதுமான வள்ளலார் எப்போது வருவார் என தெரியாமல் அவரை உண்பிப்பதுபற்றியும் கடந்த நிலை உருவாகிவிட்டது

மின்ட் என சொல்லப்படும் தங்கசாலை பகுதியில் வள்ளலார் அண்ணன் வாழ்ந்த ஒதுக்குப்புறமான அந்த வீட்டுக்கு சென்றிருக்கிறேன்

நல்லவேளையாக அவ்வீடு நான்கு பேர் கைமாறி இப்போது ஆன்மீக உணர்வுள்ள ஒருவரின் கைக்கு வந்ததால் அந்த மாடி போர்ஷனை அப்படியே ஒரு கோவில் போல மாற்றி வைத்திருக்கிறார்கள்

அந்த இல்லம் ஒரு திண்ணைக்கு அடுத்து வாசலும் அதனுள் இரண்டு மூன்று ஒட்டு குடித்தனமும் உள்

படியில் ஏறிப்போனால் மாடியில் சிறு வீடும் உள்ளது

இரவு நேரமானதும் வாசலை மூடி படுத்து விடுவார்கள் . பிந்திய இரவு வரும் வள்ளலார் திண்ணையில் படுத்து விடுவார் .

சாப்பாடு வேண்டும் என்று யாரிடம் கேட்க முடியும் பசி தர்ம சங்கடமான நிலைமை வள்ளலார் அனுபவித்ததுதான்

இதற்கு முன்பே நிலைக்கண்ணாடியில் தலை வார போனால் தனக்கு பதிலாக முருகனின் அருட்காட்சி காண ஆரம்பித்து அந்த சற்குருவே அவரை ரகசியமாக நடத்திக்கொண்டிருந்தார் என்பது யாரும் அறியாதது .

அரேபியாவில் பிறந்த சூபி ஞானியான முகமது சாலிக் என்பவரை அல்லாஹ் திருத்தணி சென்று முருகனிடம் குரு தீட்சை பெற்று ஒளி சரீரம் பெருக என அனுப்பிவைத்ததால் ; அப்படி பல்லாண்டு திருத்தணி குகையில் தவம் செய்து சித்தி உற்ற மகான் ஒருவரை முருகன் வள்ளலாரை வளர்க்கும்படியாக அனுப்பிவைத்தார்

அவர் ஒளி தேகி ஆனதால் வள்ளலாரின் கண்களுக்கு மட்டுமே புலப்படுவார்

உலகறிய வள்ளலார் பாடிய முதல் பாடல் திருவோங்கு என்ற தெய்வமணிமாலை பாடல் என்றால் வள்ளலார் முதல்முதல் பாடியது

திருத்தணி முருகனைக்கண்டு பாடியது என அவரே பின்னாளில் தெரிவித்துள்ளார் . அப்படியானால் அந்த சிறுவனை யார் திருத்தணி அழைத்து சென்றது என்றால் சாட்சாத தணிகைமணி பிரானே அவரை அழைத்து சென்று கொண்டிருந்தார்

அவர் வீட்டுக்கு நள்ளிரவு வந்தாலும் வாயில் கதவை திறந்து அண்ணியின் ரூபத்தில் ஒற்றியூர் வடிவாம்பிகையே வந்து உணவளிப்பார்

சற்குருநாதர்கள் நால்வரில் ஒருவர் தரிசனம் கிடைத்துவிட்டால்போதும் மற்றவர்களும் அழைக்காமலேயே உதவிக்கு வருவார்கள்
அவர்களுக்குள் எந்த பிரிவினையும் உயர்வு தாழ்வும் கிடையாது

ஈஎன்று நான்ஒருவர் இடம்நின்று
கேளாத
இயல்பும்என் னிடம்ஒருவர்ஈ
திடுஎன்ற போதவர்க் கிலைஎன்று
சொல்லாமல்
இடுகின்ற திறமும்இறையாம்
நீஎன்றும் எனைவிடா நிலையும்நான்
என்றும்உள்
நினைவிடா நெறியும்அயலார்
நிதிஒன்றும் நயவாத மனமும்மெய்ந்
நிலைநின்று
நெகிழாத திடமும் தந்து

அதிதேவர் யாராவது ஒருவரின்
தரிசனம் கிடைக்கப்பெற்றால்
மட்டுமே ஈ என்று இறக்காத
நிலைமை உண்டாகும்

ஆனால் ஈ ஈ என்று கோவில் குளம்
என்று எங்கும் ஏங்கி அலையும்

சாதாரண மனிதர்களை காணும் போது வள்ளலாரின் மனம் பதைக்கிறது அவர்களுக்கு இல்லை என சொல்லாமல் ஈயும் திறம் வேண்டும் என ஏங்குகிறார்

அந்த ஏக்கம் உறு பசி தீர்த்தால் அந்த மனிதனை இறைவனை நோக்கி திருப்பமுடியுமே என்ற ஏக்கமே அவரால் அணையாத அடுப்பு ஒன்றை வடலூரில் ஏற்ற முடிந்தது

அடுத்து மிகமிக முக்கியமான உபதேசம் எதற்காகவும் யாரையும் குறை சொல்லாதே திட்டாதே வெறுக்காதே என்ற அஹிம்சை கொள்கை . ஒரு தவறுக்கு மனிதன் மட்டும் பொறுப்பே இல்லை ; பின்னணியில் அசுர ஆவிகள் மனிதனின் சிந்தனையை

கெடுக்கின்றன என்பதால் அவனை சகித்து அவன் திருந்தும்படியாக பிரார்த்தனை செய்து அவனை திருத்தவேண்டும் , கோபம் கொள்ளலாகாது

சீஎன்று பேய்என்று நாய்என்று பிறர்
தமைத்
தீங்குசொல் லாததெளிவும்
திறம்ஒன்று வாய்மையும்
தூய்மையும் தந்துநின்
திருவடிக் காளாக்குவாய்
ஆம் இறைவனும் அவரது அடுத்த வெளிப்பாடுகளான நான்கு அதிதேவர்களுமே அவர்களது திருவடிக்கு நம்மை ஆளாக்கி திறமும் வாய்மையும் தூய்மையும் தரமுடியும்

நாராயணன் நாமத்தினாலும்

ஆதிசேஷனின் நாமத்தினாலும்
நாராயணியின் நாமத்தினாலும்
சிவனின் நாமத்தினாலும் கடவுள்
தங்களையும் தங்கள்
குடும்பத்தாரையும் தமது பேரருளால்
நிரப்ப வேண்டுகிறேன்

அருட்பெருஞ்சோதி
அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை
அருட்பெருஞ்சோதி

Kanthar Kotta Manimalai 10

கந்தர் கோட்ட மணிமாலை 10

கரையில்வீண் கதைஎலாம்
உதிர்கருங் காக்கைபோல்

கதறுவார் கள்ளுண்டதீக்

கந்தம்நா றிடஊத்தை காதம்நா
றிடஉறு

கடும்பொய்இரு காதம்நாற

வரையில்வாய் கொடுதர்க்க
வாதம்இடு வார்சிவ

மணங்கமழ் மலர்ப்பொன்வாய்க்கு

மவுனம்இடு வார்இவரை மூடர்என
ஓதுறு

வழக்குநல் வழக்கெனினும்நான்

உரையிலவர் தமையுறா துனதுபுகழ் பேசும்அவ

ரோடுறவு பெறஅருளுவாய்

உயர்தெய்வ யானையொடு குறவர்மட மானும்உள்

உவப்புறு குணக்குன்றமே

தரையில்உயர் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 10

காக்கைகள் அந்தி அடங்குகிற நேரம் ஒரு பெரிய மரத்தில் கூடி பழமை பேசும் .கரைந்துகொண்டே இருக்கும் . ஒரு

காக்கை கரைவதற்கு பதில் சொல்வதாக நினைத்துக்கொண்டு கூட்டமாக கரைந்துகொண்டே இருக்கும் அதில் ஒரு உப்பும் சப்பும் இல்லை என்பதை வள்ளல்பெருமான் அறிந்திருக்கிறார் .

அதுபோல உப்பும் சப்புமில்லாமல் ஓயாமல் வெட்டி பெருமை புராணம் பாடுவது மனிதர்களின் இயல்புமாகும்

இப்படி வெட்டியாக பேசுவது சாதாரண மனிதர்களை விட கள்ளுண்டவர்களுக்கு மிக மிக அதிகம் ,

சாராயத்தை குடித்து விட்டு கங்குகணக்கில்லாமல் உளறுவதும் ஊத்தை காதம் நாறுவதும் வாய்வலிக்கும் வரை தர்க்கம் செய்வதும் செய்வார்கள் ; சிவனைப்பற்றி தேவர்களைப்பற்றி இறைவனைப்பற்றி பேசினால் வாயை

மூடு தொனதொனதென்னாதே என்பார்களாம் ;

ஆனாலும் இப்படிப்பட்ட மனிதர்களாக இருந்தாலும் உனது புகழ் நான் பேசுவதை காதுகொடுத்து கேட்டு உன்னையும் துதிக்கும் மனது சிலருக்கு இருக்குமே அப்படிப்பட்டவர்களின் உறவு எனக்கு அமையட்டும்

இறை அடியவர்கள் ஒருபோதும் தரம் தாழ்ந்தவர்களை ஒதுக்கவே மாட்டார்கள் ; ஏனென்றால் சற்குருநாதன் முருகன் எப்படிப்பட்டவன் என்பது அவர்களுக்கு முன் உதாரணம் .

உயர்ந்த பண்புள்ள தெய்வானையோடு மட்டுமல்ல மிக தாழ்ந்த மடக்குறத்தி வள்ளியொடும் உள்ளார்ந்து இசைவாக சந்தோசமாக வாழும் குணக்குன்று அவனல்லவா ?

Kanthar Kotta Manimalai 11

கந்தர் கோட்ட மணிமாலை 11

நாம்பிரமம் நமைஅன்றி ஆம்பிரமம் வேறில்லை

நன்மைதீ மைகளும் இல்லை

நவில்கின்ற வாகிஆந் தரம்இரண்டினும்ஒன்ற

நடுநின்ற தென்றுவீணாள்

போம்பிரம நீதிகேட் போர்பிரமை யாகவே

போதிப்பர் சாதிப்பர்தாம்

புன்மைநெறி கைவிடார் தம்பிரமம் வினைஒன்று

போந்திடில் போகவிடுவார்

சாம்பிரம மாம்இவர்கள் தாம்பிரமம் எனும்அறிவு

தாம்புபாம் பெனும்அறிவுகாண்

சத்துவ அகண்டபரிபுரண காரஉப

சாந்தசிவ சிற்பிரம நீ

தாம்பிரிவில் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 11

கடவுளை நீ உனக்குள்ளேயே தேடி கண்டறியவேண்டும் . நானே கடவுள் என்பதை சொல்லப்பழகிக்கொள்வது

அவ்வளவு சாதாரண விசயமல்ல
எங்கே நானே கடவுள் என சாதாரண
மக்களை சொல்லச்சொல்லுங்கள்
பார்க்கலாம் ; அவர்களுக்கு தைரியம்
வராது

நம்மை நாம் அறிந்துகொண்டால்
மட்டுமே கடவுளை நீ உணர முடியும்
என சித்தர் பெருமக்கள் காட்டிய
உயர்ந்த ஞானத்தை என்னிடம் வந்து
சிரத்தையுடன் கற்றுக்கொண்டதால்
நீயும் ஞானியாகி விட்டாய்

அதனால் நான் கடவுள் நான் கடவுள்
என சொல்லும் தைரியம் உனக்கு
வந்திருக்கிறது . இந்தா பிடி
சட்டிபிகேட் நீ ஞானியாகி விட்டாய்
இப்பிறவிக்கு பிறகு நன்மையையும்
இல்லை தீமையும் இல்லை

இருக்கிறவரைக்கும் மகிழ்ச்சியாக
இரு . சந்தோசம் சந்தோசம்

அப்படி இருக்க கற்றுக்கொள்வது உன்
ஞானத்தில் உள்ளது

எந்த கட்டுப்பாடுகளையும்
வைத்துக்கொள்ளாதே

இயற்கையோடு இயற்கையாக
பிரம்மத்தோடு பிரம்மமாக இருக்க
கற்றுக்கொள் என உசுப்பேத்திய
ரஜினீஸ் முதல் இன்றைய பல
கார்பரேட் குருமார்களின் வியாபாரம்
படித்த நல்ல வேலையிலிருக்கும்
இளைஞர்களுக்கு உற்சாகத்தை
தருகிறது

சிலர் அதை வரைமுறையற்ற இன்ப
நுகர்ச்சிக்கான கதவாக

ஆக்கிக்கொண்டார்கள்

இன்னும் சிலர் எதையும் அனுபவி
ஆனால் பிறருக்கு தீங்கு இல்லாமல்
அளவோடு அனுபவிக்க
கற்றுக்கொள்வது நுட்பம்

அறிவை பட்டை தீட்டி உலகிற்கு
கேடில்லாமல் மனதை
ஒழுங்குபடுத்தி உன் உலக வாழ்வில்
முன்னேறலாம் ; குடும்பத்தை
முன்னேற்றலாம்

வாழ்க வளமுடன் வாழ்க வளமுடன்
என சொல்லிக்கொண்டே திறமையாக
வியாபாரம் செய்து முன்னேறலாம்
என சொன்னவுடன் கொள்ளை லாபம்
அடிக்கும் வியாபாரிகளுக்கு ரெம்ப
சவுகரியமாக ஆகி விட்டது

உனக்கும் உலகிற்கும்
தீமையில்லாமல் அகத்தாய்வு
மனதை ஒழுங்கு செய்து திறம்பட
வாழும் இந்த வாழ்வே போதும்

இந்த உபதேசம் எந்த
அடிப்படையிலானது என்றால் இனி
இந்த பிறவிக்கு பிறகு நாம் இல்லை ;
பிரம்மத்தில் நல்ல பதிவுகளையும்
கெட்ட பதிவுகளையும் கலந்து விட்டு
இல்லாமல் போய் விடுவோம் ;
அதற்காக ஆட்டம் போடு அக்கிரம்
செய் சமுதாயத்தை கெடு என
சொல்லவில்லை ; நன்மையாக வாழ
பழகு

வீணாக போகும் பிரம்மத்தின் நீதி
இது

இல்லாமல் போகும் பிரம்மத்தின் நீதி

இது

அதாவது அழிவை விரும்பும்
பிரம்மத்தின் நீதி இது

பிரம்மம் பிரம்மம் என அந்த அழிவை
விரும்பும் பிரம்மத்தின் (அசுரர்களின்)
உபதேசத்தை கேட்டு
பிரம்மையாகவே போதித்து
சாதிப்பர்களாம்

இது புண்மை நெறி என்கிறார்
வள்ளல்பெருமான்

வேதாத்திரியம் என்கிறார்களே அது
திரிக்கும் நெறி . மேற்போக்காக
ஆன்மிகம் போல தெரிந்தாலும் முடிவு
என்னவோ நித்தியஜீவனை மறுப்பது .
மரணமில்லா பெருவாழ்வு என்ற
இலக்கை அறிந்துகொள்ளவிடாமல்

அவர்களை சூனியத்தை நோக்கி திருப்பிவிட்ட அசுர உபதேசமாகும் .

வேதாத்திரி ஆரம்பத்தில் ஒரே ஒரு பொய்யை பரப்பினார்

வள்ளலார் ஒரு பவுர்ணமி இரவில் வேதாத்திரியின் கால் பக்கம் வந்து நின்றதாகவும் இனிமேல் உன் மூலமாக நன்றாக கல்லா கட்டுவேன் என சொன்னதாகவும் ஒரு பொய்யை அவிழ்த்துவிட்டார்

சன்மார்க்கத்தை சேர்ந்த பல அன்பர்கள் கூட்டம் கூட்டமாக அவர் பின்னால் அணிவகுத்து வேதாத்திரியத்தை வளர்த்துவிட்டார்கள்

உன்னதமான ஏக இறைவனின்

பேரிலான பக்தி சரணாகதி ; ஆத்தும சரீரத்தை ஒளி சரீரமாக வளர்த்து ஸ்துல சரீரத்தின் அவசியம் இல்லாமல் நித்தியஜீவனை அடைந்து என்றென்றும் உயிர் வாழும் சகாக்கல்வியை போதித்தவரான வள்ளல்பெருமான் எங்கே இனிமேல் இல்லாமல் கரைந்து மறைந்துவிடுவோம் என்று சொன்ன வேதாத்திரி எங்கே

இருவரும் நேர் எதிர்புறமல்லவா ?

வேதாத்திரி சொன்னார் . சாதாரண பொதுமக்கள் இல்லாமல் போய் விடுவார்கள்

ஆனால் யோகக்கலையை கற்றுக்கொண்டு குண்டலினியை ஏற்றியவர்கள் ஜீவசமாதி அடைந்து

சாகாமல் இருப்பதுதான் சாகாக்கல்வி

ஜீவசமாதியை வள்ளல்பெருமான் ஆதரித்தது இல்லை

அழிகிற உடலை அழிய விடாமல் காக்கிரதல்ல மரணமில்லா பெருவாழ்வு

ஆத்தும சரீரத்தை ஒளி சரீரமாக மாற்றிக்கொள்வது . தேவராக மாறி பரலோகத்திற்குள் பிரவேசிப்பது மனிதனாக பிறந்ததின் இலக்கு

ஆதியோகிய சிவன் வளர் ஒளி நாதராக தனது ஆத்துமாவில் ஒளியை பெருக்கி முழுமை அடைந்ததை வைரவன் என்றார்கள்

மனித படைப்பு எதற்காக என்றால்

நாம் தேவராக மாறி
பரலோகத்திற்குள் நுழைய வேண்டும்

அருட்பெருஞ்சோதி இறைவன்
ஆதியில் படைத்த 33 கோடி
தேவர்களில் ஒரு பெரிய கூட்டம்
இறைவனுக்கு விரோதமாக தன்
முனைப்பு ஆணவம் அடைந்து
அசுரர்களாக மாறிவிட்டனர்

அந்த வெற்றிடத்தை மனிதர்களாக
இருந்து ஒளி சரீரம் பெறுவோரின்
எண்ணிக்கை நிரப்ப வேண்டும்
என்பதற்காகவே பூமியில் மனித
படைப்பு அனுமதிக்கப்படுகிறது

அது நிரம்பினால் பூமியில் மனித
படைப்பு நிறுத்தப்படும்

இறைவனே பெரியவன் என

முன்னிலைப்படுத்துபவர்கள்
தேவர்கள்

நாங்களும் இறைநிலையை
அடைந்துவிட்டோம் என
தங்களைத்தாங்களே
பெருமைப்படுத்துபவர்கள் அசுரர்கள்

ஆன்மீகவாதிகளில் இந்த இரண்டு
பிரிவுகளும் உள்ளனர்

ஆன்மிகம் என்றவுடன் ஆகா என
ஓடி விழுந்துவிட கூடாது

எவ்வளவோ சித்துக்கள் ஆற்றல்
இருந்தாலும் ; திரள் திரளாக வந்த
மக்களுக்கு நன்மைகள் நடந்தாலும்
அதை விளம்பரம் போட்டு காட்டாமல்
அருட்பெருஞ்சோதி வழிபாட்டை
முன்னிலைப்படுத்தியவர்

வள்ளல்பெருமான்

தற்பெருமை பிடித்த மனிதர்களுக்கும் இறைவனை மகிமைப்படுத்து ; அவரை சராணகதி அடைக என்றால் பிடிக்காது

நீயும் கடவுளாகலாம் என்றால் சபாஷ் என்பார்கள்

அந்த மனிதன் கடவுளாகிவிட்டான் ; சித்தராகிவிட்டான் ; ஜீவசமாதி ஆகி அருள்பாலிக்கிறான் என்றால் ஓடி ஓடி விழுந்து கும்பிட்டுக்கொள்வான் ஆனால் கடவுளை கும்பிடு என்றால் ஒரு பார்வை பார்ப்பான்

நீ அறிந்த ரூபம் ; பெயர் எல்லாவற்றையும் விட உன்னதமானவர் கடவுள்

அருட்பெருஞ்ஜோதி

சிவனை நீ நேசிக்கிறாயா

அவரை குருவாக வைத்துக்கொள்

இங்கு முருகனை பாடுமிடத்து வள்ளல்பெருமானின் வார்ணனையை பாருங்கள்

பரிபபூரன அகன்ட சத்துவமான பிரம்மத்தின் உப சாந்தன் முருகன்

சிவனின் சின்ன வடிவம் முருகன்

பிரம்மத்தின் உபசாந்தன் முருகன் என்றால் நம்மைப்போன்ற மனிதர்களின் நிலை என்ன ?

முருகனே உபசாந்தன் என்றால் சாகிற பிரம்மமாகிய மனிதர்கள்

# நம்மை பிரம்மம் என்று சொல்லலாமா ?

Kanthar Kotta Manimalai 12

கந்தர் கோட்ட மணிமாலை 12

பார்கொண்ட நடையில்வன்
பசிகொண்டு வந்திரப்

பார்முகம் பார்த்திரங்கும்

பண்பும்நின் திருவடிக் கன்பும்நிறை
ஆயுளும்

பதியும்நல் நிதியும்உணர்வும்

சீர்கொண்ட நிறையும்உட்
பொறையும்மெய்ப் புகழும்நோய்த்

தீமைஒரு சற்றும்அணுகாத்

திறமும்மெய்த் திடமும்நல்
இடமும்நின் அடியர்புகழ்

செப்புகின் றோர்அடைவர்காண்

கூர்கொண்ட நெட்டிலைக்
கதிர்வேலும் மயிலும்ஒரு

þக்‘ழியங் கொடியும்விண்ணோர்

கோமான்தன் மகளும்ஒரு
மாமான்தன் மகளும்மால்

கொண்டநின் கோலமறவேன்

தார்கொண்ட சென்னையில்
கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 12

நெட்டிலை என்பதை நெட்டிலிங்க
மரம் எனவும் கருதலாம்

மரம் கூராக இருக்கும்

சடைசடையாக பக்கவாட்டு
சிம்புகளும் இலைகளும் அடர்த்தியாக
இருக்கும்

ஞானம் முழுஞானம் என்பது
ஆழமானது மட்டுமல்ல
அகலமாகவும் பல்முகத்தன்மை
உடையதாகும்

பக்கவாட்டில் சிம்புகள் இருக்கலாமே
தவிர பக்கவாட்டில் வளராமல
இறைவனை நோக்கி உச்சியை
நோக்கியே வளரவேண்டும்

நெட்டிலிங்க மரத்தில் நுனி
உண்ணதத்தை நோக்கி இருக்க
அதற்கு ஒர்மையாக பல நூறு
விழுதுகள் இருக்கும்

அதைப்போலவே பூமியில் உள்ள

எந்த சமயங்களும்
குருமார்க்கங்களும் இறைவனை
நோக்கியவையே

அடியில் உள்ள விழுதில் ஒரு
மார்க்கத்தில் உள்ள மனிதனுக்கு
தனக்கு மேலே
உள்ள விழுதில் உள்ள மனிதர்கள்
அதே மரத்தில் தங்கியுள்ளவர்கள்
என்பது
புரியாது

படிப்படியாக மேலேறி உச்சியை
நெருங்கியவற்கு தங்களுக்கு கீழே
நாலா புறத்திலிருந்தும் ஏறி
வருகிறவர்களை தெரியும்

அவர்கள் நின்று கொண்டு தவிக்கிற
இடறல்களும் புரியும்

கீழ்த்தட்டில் உள்ளவர்களுக்கு மேலே இருப்பவர்களும் புரியாது பக்கவாட்டில் உள்ளவர்களையும் தெரியாது

இறைவனை நோக்கிய இந்த மரம் ஏணி

சகல மார்க்கங்களையும் உள்ளடக்கிய குருத்துவங்கள் சற்குருத்துவம்

சற்குரு

பல குருமார்களின் அதிபர் தலைவர்

சகல என்பதே சற் என்பதாகும்

ஆவிமண்டலத்தில் சற்குரு சகல ஞானத்திற்கும் அதிபதி ஆதிசேசனாகும்

அந்த ஆதிசேசன் காரியப்படும்போது செங்கோடன் கார்க்கோடன் என இரண்டு வியாபகம்

செங்கோடன் ஞானசற்குருவாம் முருகன்

அருளுலக வாழ்வுக்கு சற்குரு

கார்க்கோடன் உலக வாழ்வுக்கு சற்குரு

விநாயகர்

ரெண்டு குட்டு குட்டி அப்பம் பொறி ஆட்டபாட்டம்

உலக வாழ்விற்கான உத்வேகம்

பரப்பிரமம் என்றவுடன் ஒன்று ஒரு நபர் என்பதைப்போல ஒரு படிமம்

பலரை ஏமாற்றுகிறது

ஒன்றாய் அரும்பி பலவாய் விரிந்து

பல தேவர்களாக விரிந்து
காரியப்பட்டுக்கொண்டுள்ளது

33 கோடி தேவர்களை அடக்கிய
பரமண்டலம்

33 அதிதேவர்கள்

இறைபேரரசில் அவரவர் வேலையை
கணகச்சிதமாக செய்து
இயங்கிக்கொண்டுள்ளது

இந்த அனைத்திற்கும் தலைவரான
ஒரே நபர் போன்றவர் இறைவன்
அருட்பெருஞ்ஜோதி

அல் என அரபு பாஸையிலும் எல்

என யூதபாஸையிலும்
அழைக்கப்படுபவர் தமிழில்
இறைவன் என்ற
பொதுவார்த்தையாகும்

நாம் உருவமாக வடிவமாக
அறிந்தவர்கள் அனைவரும் தேவர்கள்

இந்த அல் அல்லது பிரம்மம் என
சொல்லப்படும் படைப்புக்கும்
வெளியே வெட்டவெளியாகவும்
நிற்பவர்

பிரபஞ்சத்தையும் விட பெரியவர்

அனைத்தையும் நீங்கி நிற்பாய்
என்கிறது அபிராமி அந்தாதி

பிரம்மம் என்றவுடன் இறைவன்
என்பதாக சிலர் தவறான

படிமானத்தில் உள்ளனர்

பிரமம் என்பது படைக்கப்பட்டது

பரமாத்மா பிரபஞ்சம் பரப்பிரமம்
மூன்றும் ஒன்றே

நபராக சொன்னால் நாராயணன்
அதிதேவர் ஆர்க் ஏஞ்சல் காப்ரியேல்

இறைவனுக்கு அடுத்தவர் ஆனால்
இறைவனல்ல

ஆனால் படைப்புகள் அனைத்திற்கும்
தலைவர்

அவருக்குள் அவர் மூலமாக
அவரைக்கொண்டே சகலமும்
படைக்கப்பட்டுள்ளது

மூவரும் தேவரும் முத்தரும் அறியா

அருட்பெருஞ்ஜொதி என வள்ளல்
பெருமான் சொல்கிறாரே அந்த
மூவரில் நாராயணன் என்ற
பரப்பிரமமும் அடக்கம்

முருகனை உபசாந்த சிவ சிற்பிரமன்
சின்னபிரமன் என வள்ளலார்
முந்தியபாடலில் சொன்னார்

மூவரும் முத்தரும் சித்தரும் அறியா
அருட்பெருஞ்ஜோதி என வள்ளலார்
பாடியதை இலக்கிய புகழ்ச்சி
வார்த்தையாக புரிந்துகொள்ள
வேண்டும்

சிவனுக்கும் நாராயணனுக்கும்
பிரம்மாவுக்கும் தெரியாத
அருட்பெருஞ்ஜொதி என
பாடிட்டாரு பாடிட்டாரு அதனால
அவர்களையெல்லாம் உடைப்பிலே

போடு என்பதுபோல
சன்மார்க்க விருட்டான் குஞ்சுகள்
கூவித்திரிகின்றன

கவிஞர்களுக்கே உரிய புகழ்ச்சி அணி
உயர்த்திபேசும் வார்த்தைகளை
அளவாக எடுத்துக்கொள்ள வேண்டும்

தேரை ஊர் கூடி கொட்டடித்து
வடம்பிடித்து இழுத்து நெம்பி
தள்ளுவார்கள்

அடுத்த இடத்தில் போய்
நின்றுகொள்ளும்

பிறகு மறுநாள் வந்து அதே மாதிரி
நகட்டிவிட்டால் அடுத்த இடத்தில்
போய் நின்றுகொள்ளும்

அதுபோலத்தான் ஆன்மீக வாழ்வும்

ஒரு மாயை அறியாமையை விட்டு நகட்டி விட்டால் அடுத்ததில் போய் சிக்கிக்கொள்ளும்

கடைசி நிமிஸம் வரை மாயை இருக்கும்

நாமனைவரும் இப்படித்தான் என ஏற்றுக்கொண்டே ஆக வேண்டும்

யார் எது சொன்னாலும் அதில் கொஞ்சமாவது உண்மை இருக்கும்

என ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளும் மனநிலையை வருந்தி
கற்றுக்கொள்ள வேண்டும்

நமது அனுபவத்தில் நின்று கொண்டு அடுத்த கருத்தை ஊகூம் ஊகூம் என எதிர்த்துக்கொணடே இருப்பது நமது

மனதின் இயல்பு

வள்ளாரின் கடைசி கட்டளை

ஆண்டவர் வரும்வரை விசாரம் செய்துகொண்டிருங்கள் என்பதாகும்

விசாரம் ஆரோக்யமான தர்க்கம்

எதிலும் உண்மையிருக்கிறது

எதிலும் பொய்யும் கலந்து வருகிறது

ஆகவே எந்த கருத்தோடும் அதிலும் என்ன உண்மை இருக்கிறது என மாற்று மார்க்க கருத்துகளை உரசிப்பார்க்க வேண்டும்

ஒரு ஞானி பூமியில் இருக்கும்போது எதிர்க்கிற அசுர சக்திகள் அவர் சென்றுபோனதும் அவரை

துதிபாடுகிற சீடர்களோடு
நல்லிணக்கமாகி விடுகின்றன

அவரைப்போல உண்டுமா என
செம்படித்து அவரின்
வார்த்தைகளுக்கு மெல்ல தவறான
அர்த்தம் விளக்கம் கொடுக்க
ஆரம்பித்துவிடுகின்றன

எதிர்ப்பதை விட கூட இருந்து
கலப்படம் செய்வது வெற்றிகரமானது
என்ற உபயத்தை அசுர சக்திகள்
வாடிக்கையாக செய்கின்றன
வள்ளல்பெருமானின் வெற்றியின்
ரகசியம் பக்தியோகியாக
அருட்பெருஞ்ஜோதி இறைவனை
பற்றிக்கொண்டிருந்ததுவே.

இன்று சன்மார்க்கத்தில் வளர்ந்து
வருகிற ஆபத்து இறைவனை

உணர்வற்றவராக சித்தரிப்பது

வள்ளல்பெருமானோ உணர்ச்சியுள்ள ஜீவனுள்ள இறைவனோடு உறவாடியவர்

Kanthar Kotta Manimalai 13

கந்தர் கோட்ட மணிமாலை 13

வன்பெரு நெருப்பினைப் புன்புழுப் பற்றுமோ

வானைஒரு மான்தாவுமோ

வலியுள்ள புலியைஓர் எலிசீறு மோபெரிய

மலையைஓர் ஈச்சிறகினால்

துன்புற அசைக்குமோ வச்சிரத் து‘ண்ஒரு

துரும்பினால் துண்டமாமோ

சூரியனை இருள்வந்து சூழுமோ காற்றில்மழை

தோயுமோ இல்லைஅதுபோல்

அன்புடைய நின்அடியர்
பொன்அடியை உன்னும்அவர்

அடிமலர் முடிக்கணிந்தோர்க்

கவலமுறு மோகாமம் வெகுளிஉறு
மோமனத்

தற்பமும்வி கற்பம்உறுமோ

தன்புகழ்செய் சென்னையில்
கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தன்முகத் துய்யமணி உன்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 13

சைவமரபில் சிவனை வழிபடுவது போல சிவனடியாரைப்பேணுவதும் வழிபாடு என்பதாக நடைமுறை உண்டு .

குருவின் மேன்மை நம் இருளை அகற்றி நம்மை இறைவனை நோக்கி உயர்த்திவிடும் என்ற கருத்தை சடங்காச்சாரமாக சிவனடியார் வழிபாடு என்பதாக மாற்றிவிட்டார்கள்

இந்த கருத்தை வலியுறுத்தி நாயன்மார்கள் கதையையும் கூறினார்கள் . நாயன்மார்கள் என்ற தரத்தை அடையாதவர்களும் அதுபோல நடித்து பல பிழைப்புவாதிகள் ஆன்மீகத்தில் புகுந்து சீரழிவுகளையும் செய்தார்கள்

நாடகத்தால் உன்னடியார் போல்நடித்து நான்நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புனக்கென்
ஊடகத்தே நின்றுருகத் தந்தருள்எம்

உடையானே. - திருவாசகம் பாடல் எண் : 11

நான் என்ற சுயம் அகம்பாவமே வீடு பேறு அடைவதற்கான முயற்சியில் தடைக்கல்லாக வந்துவிடுகிறது ; ஆனால் யார் உண்மையான அன்பை இறைவன் மீதும் அவரது அதிதேவர்கள் மீதும் கொண்டவர்களோ ; பக்தியோகம் கைகூடியவர்களோ அவர்கள் ஒருபோதும் தன்னை துருத்திக்கொள்ளவே மாட்டார்கள் ; எப்போதும் கடவுளையே மேன்மைப்படுத்துவார்கள்

வள்ளல்பெருமானும் உன் மீது அன்புடைய நின் அடியார்களை குருவாக கொண்டு பக்தியோகம் விளைவிப்பவர்களுக்கு எந்த கெடுதலும் நேராது என்கிறார்

அவலமுறுமோ காமம் வெகுளிஉறுமோ மனத்
தற்பமும் விகற்பம் நேறுமோ

இல்லை என்கிறார்

வள்ளல்பிரான் முருகனிலிருந்து தொடங்கி ஒவ்வொரு தேவராக உபவாசித்து கடைசியாக அனைத்து தேவர்களையும் விட பெரியவரான அருவ ஏக இறைவனை அருட்பெருஞ்ஜோதி என கண்டுணர்ந்தவர்

இந்த அருட்பெருஞ்ஜோதி யின் அடியவர்கள் யார்

யார் என்றால் இறைவனுக்கு அடுத்த நிலையில் உள்ள நான்கு அதிதேவர்களான நாராயணன் ஆதிசேஷன நாராயனி சிவன் ஆகியோரே

இந்த நால்வரின் அடியை தன் முடியாக கருதக்கூடியவர்களே சகல

மாயைகளிலிருந்தும் விடுபட
கூடியவராவர்

அவ்வாறில்லாமல் மனித குருமார்களை
வழிபடுவதென்பது அஞ்ஞானிகள்
தங்களுக்கு தாங்களே புகழ்
விரும்பிக்கொண்ட மாயையாகும்

Kanthar Kotta Manimalai 14

கந்தர் கோட்ட மணிமாலை 14

காணலிடை நீரும்ஒரு கட்டையில் கள்வனும்

காண்உறு கயிற்றில் அறவும்

கடிதரு கிளிஞ்சிலிடை வெள்ளியும் பொன்னைக்

கதித்தபித் தளையின்இடையும்

மானலில் கண்டுள மயங்கல்போல் கற்பனையை

மாயையில் கண்டுவிணே

மனைஎன்றும் மகவென்றும் உறவென்றும் நிதிஎன்றும்

வாள்வென்றும் மானம்என்றும்

ஊனலின் உடம்பென்றும்
உயிரென்றும் உளம்என்றும்

உள்என்றும் வெளிஎன்றும்வான்

உலகென்றும் அளவுறுவி காரம்உற
நின்றஎனை

உண்மைஅறி வித்தகுருவே

தானமிகு சென்னையில் கந்தகோட்
டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தன்முகத் துய்யமணி உன்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. -14

கானல்நீர் போல அளவற்ற மாயைகள் நம்மை பிடித்து
ஆட்டுவித்துக்கொண்டுள்ளன .ஒரே ஒரு

சின்ன விசயத்தை விட்டு வெளியே வர ஒரு பிறவி ஆகிவிடுகிறது . ஆனால் சற்குருநாதர் அறிவித்தால் எல்லா மாயைகளையும் கடந்து விட முடியும்

உண்மை ஒருபோதும் நாம் கண்டு பிடிப்பதல்ல ; சற்குருவால் உணர்த்துவிக்கப்படுவது

வள்ளல்பெருமானும் அளவற்ற விகாரம்உற நின்ற எனக்கு உண்மை அறிவித்த குருவே என்கிறார்

காற்றாற்று வெள்ளத்தில் சிக்கிய ஒருவன் ஒரு மரத்தை பிடித்து உச்சிக்கு ஏறுகிறான் ; அந்தோ அங்கு ஒதுங்கியிருந்த ஒரு திருடன் கத்தியை காட்டி மிரட்டி அவனின் அணிகளை பிடுங்கிக்கொள்கிறான்

எரிகிற விறகில் இருந்து தப்பி வாணலியில் ஏறி கொதிக்கிற

எண்ணெய்க்குள் மரவண்டுகள் விழுவதை பார்த்திருக்கிறோம்

மாயைகள் ; வினைகள் நம்மை பிடித்து வாட்டும்போது மனிதர்கள் இப்படித்தான் தவிப்பார்கள்

கிளிஞ்சலுக்குள் வெள்ளி இருப்பதுபோல பளபளக்கும் . ஆனால் இருக்காது

தங்கமுலாம் பூசப்பட்ட பித்தாளை ஆபரணங்களால் எமாற்றப்படுவதுபோல

மனைஎன்றும் மகவென்றும் உறவென்றும் நிதிஎன்றும்
வாள்வென்றும் மானம்என்றும்

தற்காலிக உறவுகளையும் உலகத்தையும் கண்டு மயங்கிக்கொண்டு இருக்கிறோம்

இந்த உலகம் என்னை பரத்திற்கான தேடலுக்குள் முன்னேற விடாமல் மயக்கி மயக்கி பின்னோக்கி இழுக்கிறது

ஆனாலும் இறைவனின் கிருபை ; குருமார்களால் அவ்வப்போது உண்மைகள் உணர்த்துவிக்கப்படுகின்றன

அனுபவம் என்ற பாடம் மூலமாகவும் ;
இறைவனால் குரு என்ற தகுதிக்கு உயர்த்தப்பட்ட நபர்களாலும் ;
ஆவிமண்டல குருநாதர்களாலும்
ஒவ்வொரு ஆத்மாவும் உயர்த்தப்பட
இறைபேரரசு நடவடிக்கை
எடுத்துக்கொண்டுதான் உள்ளது

Kanthar Kotta Manimalai 15

கந்தர் கோட்ட மணிமாலை 15

கற்றொளிகொள் உணர்விேனார்
வேண்டாத இப்பெருங்

கன்மவுட லில்பருவம்நேர்

கண்டழியும் இளமைதான் பகல்வேட
மோபுரைக்

கடல்நீர்கொ லோகபடமோ

உற்றொளியின் வெயில்இட்ட
மஞ்சளோ வான்இட்ட

ஒருவிலோ நீர்க்குமிழியோ

உரைஅனல் பெறக்காற்றுள் ஊதும்
துரத்தியோ

உன்றும்அறி யேன் இதனைநான்

பற்றுறுதி யாக்கொண்டு
வனிதயைர்கண் வலையினில்

பட்டுமதி கெட்டுழன்றே

பாவமே பயில்கின்ற தல்லாது
நின்அடிப்

பற்றணுவும் உற்றறிகிலேன்

சற்றைஅகல் சென்னையில்
கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தன்முகத் துய்யமணி உன்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. -15

வள்ளல்பெருமான் சாதாரண மனிதர்களின் மன மாயைகளை விட முடியாமல்

தானும் தவிப்பதுபோல இறைவனிடம் முறையிடுகிறார்

சிறு வயதிலேயே அதிதேவர் நாராயணியே அண்ணியைப்போல வந்து உணவிடுவதை உண்டு வளர்ந்தவர் பெருமான்

அருள் உணர்வும் கலந்து ஊட்டப்பட்ட உணவை உண்ட பெருமான் காலம் கடந்துதான் அது ஒற்றியூர் வடிவாம்பிகை என்பதையுணர்ந்து அக்கோவிலில் சென்று அன்னையோடே தரித்திருக்கவும் தொடங்கினார்

வடிவாம்பிகை மணிமாலை பாடல்களை படித்தால் அப்பழுக்கில்லாத அன்னையின் அழகை அருளை பெருமானார் அனுபவித்தார் என்பது விளங்கும் . அத்தகையோரை அழியும் உடலின்

ஆண்பெண் பேதங்கள் பாதிக்கவே பாதிக்காது

அபிராமி அந்தாதி

70: கண்களிக்கும்படி கண்டுகொண்டேன், கடம்பாடவியில் பண்
களிக்கும் குரல் வீணையும், கையும் பயோதரமும்,
மண் களிக்கும் பச்சை வண்ணமும் ஆகி, மதங்கர்க்குலப்
பெண்களில் தோன்றிய எம்பெருமாட்டிதன் பேரழகே.

71: அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி, அரு மறைகள்
பழகிச் சிவந்த பதாம்புயத்தாள், பனி மா மதியின்
குழவித் திருமுடிக் கோமளயாமளைக் கொம்பு இருக்க--

## இழவுற்று நின்ற நெஞ்சே.-இரங்கேல், உனக்கு என் குறையே?

மாசு மறுவற்ற அழகு காமக் கிளர்ச்சி கொடுக்காது . தெய்வீகமே நிரம்பித்ததும்பும்

நிறைகுடம் ததும்பாது

குறைகளே மனிதர்களின் மனங்களில் காமக்கிளர்ச்சியை உண்டாக்குகின்றன

வள்ளல்பெருமானும் மனிதர்கள் படும் பாட்டை குறையாக ஒப்புவிக்கிறார்

வனிதயைர்கண் வலையினில்
பட்டுமதி கெட்டு ழன்றே
பாவமே பயில்கின்ற தல்லாது நின்
அடிப்பற்ற அணுவும் அறிகிலேன்

இறைவனிடம் தாழ்மையாக நம் குறைகளை ஒப்புவித்தால் விடுபடும் வழியை அவரே உண்டாக்குவார்

Kanthar Kotta Manimalai 16

கந்தர் கோட்ட மணிமாலை 16

சடமாகி இன்பம் தராதாகி மிகுபெருஞ்

சஞ்சலா காரமாகிச்

சற்றாகி வெளிமயல் பற்றாகி
ஓடும்இத்

தன்மைபெறு செல்வம்ந்தோ

விடமாகி ஒருகபட நடமாகி
யாற்றிடை

விரைந்துசெலும் வெள்ளம்ஆகி

வேலைஅலை யாகிஆங் காரவலை
யாகிமுதிர்

வேனில்உறு மேகம்ஆகிக்

கடமாய சகடமுறு காலாகி நீடுவாய்க்

காலோடும் நீராகியே

கற்விலா மகளிர்போல் பொற்பிலா துழலும்இது

கருதாத வகைஅருளுவாய்

தடமேவு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 16

பாடுபட்டு தேடிய பணத்தை பூமியில்
புதைக்கும் பாவிகாள்
கூடு விட்டு ஆவிதான் போனபின் கூட
வருமோ

என சித்தர்பெருமக்கள் எச்சரித்தபடி
அளவுக்கு அதிகமாக சேர்க்கும் பணம்
முன்பு காலத்தில் பூமியில்
புதைத்துக்கொண்டிருந்தார்கள்

இக்காலத்திலோ அது சுவிஸ் வங்கியில்
அடக்கமாகி பேபரில் இவ்வளவு பணம்
இருக்கிறது என பார்த்துக்கொள்கிறார்கள் .
அதற்கு வட்டியும் கட்டுகிறார்கள்

தேவைக்கு அதிகமான பணம்
சடமாகிப்போன ஒன்று

அது சேர்த்தவனுக்கு எந்த பலனும்
கொடுக்காது

அந்த பணத்தை சேர்த்து சேர்த்து கண்ட
தோஷம் - பணப்பித்து இன்னும் இன்னும்
சம்பாதி என மன சஞ்சலத்தை மட்டுமே
கொடுக்கும்

ஆரம்பத்தில் அந்த பணம் தன்னைத்தானே பெருக்கிகொள்வது போல இருக்கும்

ஆனால் வேதங்கள் அனைத்தும் பணத்தை வைத்து பணத்தை மட்டும் பெருக்குவது பாவம் என்றே சொல்கின்றன

வட்டி மாபெரும் பாவம்

பணத்தை ஏதாவது ஒரு தொழிலில் முதலீடு செய்து உற்பத்தி செய்வதோ ; பொருட்களை கொள்முதல் செய்து வணிகம் செய்வது அனுமதிக்கப்பட்டுள்ளது

ஆனால் வட்டி அனுமதிக்கப்படவில்லை

வட்டி கொடுத்து பணத்தை வாங்குவதும் அவ்வளவு எளிதான காரியமில்லை

வட்டிக்கு வாங்கியோர் பாடும் அடைப்பது அவ்வளவு எளிதானதல்ல

கெடுபிடிகளும் நோவுகளும் மாறி மாறி சாபத்தை உண்டாக்கி சேர்த்த பணத்தை தொலைப்பதை தவிர வேறொன்றும் அறியாத பிள்ளைகள் வந்து பிறப்பார்கள்

நாலைந்து தலைமுறையாக சேர்த்த பணத்தை ஒரே ஒரு வாரீசு தொலைத்துவிட்டு மண்டையை போடும்

பணம் வெளியேற தொடங்கியவுடன் ஒடுவதற்கென்றே பித்து பிடித்திருப்பது போல அந்தப்பணம் ஓடுமாம்

பணம் பத்தும் செய்யும் என்பதுபோல கபட நாடகம் போடும் ; விசமாகிப்போகும் ; வேலையை ஒழுங்காக செய்யவிடாது ; ஆங்காரத்தை கொடுக்கும் ; ஒழுங்காக இருக்க விடாது

இதை பணத்தாசை பிடிக்காதிருக்க அருளுவாயாக ; தேவைகள்

சந்திக்கப்பட்டால் போதும் என
பிரார்த்தனை செய்துகொண்டே
ஓடிக்கொண்டிருக்க வேண்டும்

இல்லை என்று வருந்தாதபடி இறைவன்
அருள்செய்வாரே தவிர அருளாளர்களுக்கு
அளவுக்கு அதிகமாக இறைவன்
கொடுப்பதில்லை

ஆனால் வறுமையில் உழலவும்
விடுவதில்லை

Kanthar Kotta Manimalai 17

கந்தர் கோட்ட மணிமாலை 17

உப்புற்ற பாண்டம்என ஒன்பது
துவாரத்துள்

உற்றசும் பொழுகும்உடலை

உயர்கின்ற வானிடை எறிந்தகல்
என்றும்மலை

உற்றிழியும் அருவிஎன்றும்

வெப்புற்ற காற்றிடை விளக்கென்றும்
மேகம்உறு

மின்என்றும் வீசுகாற்றின்

மேற்பட்ட பஞ்சென்றும் மஞ்சென்றும்
வினைதந்த

வெறுமாய வேடம்என்றும்

கப்புற்ற பறவைக் குடம்பைஎன்
றும்பொய்த்த

கனவென்றும் நீரில்எழுதும்

கைஎழுத் தென்றும்உட் கண்டுகொண்
டதிலாகை

கைவிடேன் என்செய்குவேன்

தப்பற்ற சென்னையில் கந்தகோட்
டத்துள்வளா•

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 17

சுண்டைக்காயை உப்பிட்டு பாண்டத்தில் வைத்திருப்பார்கள் ; சிலநாட்கள் கெடாமல் இருக்கும்

சிலநாட்கள் பண்டம் கெடாமல் உப்பிட்டு பாதுகாக்க இயலும் ; ஆனாலும் நிரந்தரமல்ல

அதுபோன்றதே மனித உடலும் . உப்பிட்ட பாண்டம் போல சிலநாட்கள் பாதுகாப்பாக இருக்கிறது . அதில் நவதுவாரங்கள் உள்ளன . அவைகள் வழியாக கழிவுகள் வெளியேறிக்கொண்டே இருக்கின்றன ; ஆனால் அவைகளை மறைத்து ஒப்பனை செய்து சமாளித்து வருகிறோம்

கொஞ்சம் வியாதி வந்தால் கழிவுகள் நாற்றமெடுக்க தொடங்கிவிடும்

ஊத்தைச்சடலமடி ஒன்பது துவாரமடி என்ற சித்தர் பாடலை எல்லா மனிதர்களும் அறிவார்கள்

ஆனாலும் அதை நிலவென்றும் ; அருவி என்றும் மயிலென்றும் ; குயிலென்றும் ;

தேனென்றும் மானென்றும் வர்ணித்து திரிவார்கள்

ஆனால் ஞானியரோ வினைதந்த வெறுமாய வேடம்என்றும் கப்புற்ற பறவைக் குடம்பைஎன் றும்பொய்த்த கனவென்றும் நீரில்எழுதும் கைஎழுத் தென்றும் கண்டுகொள்வர்

ஆனாலும் சாதாரண மனிதர்போல வள்ளல்பெருமானும் இந்த உடலை நம்பும் ஆசை எனக்கு போகவில்லையே ; அதை மகிமை என்பதாக அலட்டித்திரிவது எனக்கு போகவில்லையே என புலம்புகிறார்

## கந்தர் கோட்ட மணிமாலை 18
Kanthar Kotta Manimalai 18

எந்தைநினை வாழ்த்தாத பேயர்வாய்
கூழுக்கும்

ஏக்கற்றி ருக்கும்வெறுவாய்

எங்கள்பெரு மான்உனை வணங்காத
மூடர்தலை

இகழ்விற கெடுக்கும்தலை

கந்தமிகு நின்மேனி காணாத
கயவர்கண்

கலநீர் சொரிந்தஅழுகண்

கடவுள்நின் புகழ்தனைக் கேளாத
வீணர்செவி

கைத்திழவு கேட்கும்செவி

பந்தம்அற நினைஎணாப் பாவிகள் தம்நெஞ்சம்

பகீர்என நடுங்கும்நெஞ்சம்

பரமநின் திருமுன்னர் குவியாத வஞ்சர்கை

பலிஏற்க நீள்கொடுங்கை

சந்தமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளா•

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. -18

வாழையடி வாழையாக திருக்கூட்ட மரபில் வந்தவர் வள்ளல்பெருமான்

அதுமட்டுமல்ல அவரே முந்திய பல பிறவிகள் வந்து படிப்படியே வளர்ந்து இந்த உண்ணதமான நிலையை அடைந்தார்

அப்படியானால் முந்திய முந்திய பிறவிகளில் போதிய முழுமை இல்லாமலும் ;கொஞ்சம் மாயைகளை கடரா நிலையிலும் இருந்து போராடித்தான் இந்த முழுமையை அடைந்தார்

கொஞ்சம் மாயைகளோடு அவர் இருந்தார் என்பதற்கு இப்பாடலே சாட்சியாகும்

இது அவர் பாடிய பாடல்தான் என்பதை சன்மார்க்கிகள் யாரும் மறுப்பதற்கில்லை

இந்த பாடலை கொஞ்சம் கவனித்தால் கடும் பற்று என்ற மாயை ;மதம் என்ற மாயை மட்டுமல்ல அதன் தொடர்பாக

மாச்சர்யம் என்ற பேத மன நிலை அவருக்கும் இருந்தது என்பதை அறியலாம்

பிற்காலங்களில் ; நான் அந்தளவு சிற்றறிவோடு இருந்தேன் என மனம் திறந்து வள்ளல்பெருமான் வாக்குமூலம் கொடுக்க தயங்கதில்லை

ஆனால் அவரை கடவுளாக ஆக்காமல் விடுவதில்லை என குரு பெருமை பேசித்திரியும் சிலர் இந்த உண்மையை உணரப்போவதில்லை

ஆறு மார்க்கங்களும் ஒவ்வொரு குருகுலமாகும்

அந்தந்த குருமார்க்கங்கள் தேவர்கள் அவரவர் ஆத்மாக்களை கடவுளை நோக்கி படிப்படியே உயர்த்தியே வருகின்றன

ஒரு குறிப்பிட்ட தரத்தை கடந்தபிறகே மற்ற குருகுலங்களை ஒப்புக்கொள்ளும் பொதுநோக்கு உண்டாகும்

அந்த ஒருமைப்பாடு சகல தேவர்களையும் கடந்த அருவ ஏக இறைவனே சகல தேவர்களாகவும் வியாபகம் ஆகி இறைபேரரசை நடத்தி வருகிறார் என்பதை உணர்ந்து ஒரே இறைவனான அருட்பெருஞ்ஜோதியானவருடன் ஒன்றினால் வருவது ஒருமைப்பாடு

இந்த ஒருமைப்பாடு மற்ற தேவர்கள் யாரையும் ஒதுக்காது ; இல்லவே இல்லை என மதம் பிடித்து கத்தாது

வள்ளல்பெருமானாரின் வார்த்தைகளில் சொல்வதானால் தேவரும் முத்தரும் சித்தரும் ஞானியரும் அந்த ஒரே இறைவனின் அருளைப்பெற்றே தம் தம்

காரியங்களை செய்துவருகிறார்கள் என்பதாகும்

அந்த நிலையை அடைந்தபிறகே பெருமான் சொன்னார் ; ஆன்மநேய ஒருமைப்பட்டு உரிமையை நான் அடைந்துவிட்டேன் என்று

ஏனெனில் எந்த இறைவனோடு ஒன்றிவிட்டோமோ ; அதே இறைவனின் அருளைப்பெற்று இயங்கிவரும் தேவர்களும் நம்மை வெறுக்கப்போவதில்லை ; நாமும் தேவர்களை அவமதிக்கப்போவதில்லை

அனைவரோடும் அவர்தம் குருகுலங்கலோடும் நல்லினக்கமாகும் அந்த நிலையே ஆன்மநேய ஒருமைப்பாடு

சமரச சத்தியத்தின் அடித்தளம் இது

அதனால்தான் தன்னை மட்டுமே பூன் பிடித்து குருபெருமை பேசித்திரியும் சன்மார்க்கிகளிடம் பெருமான் சொன்னார் ; சமரசம் என்னவென்று இப்போது நான் சொன்னாலும் அதை புரிந்துகொள்ளும் தகுதி உங்களுக்கு இல்லை என்று

ஏற்கனவே பூமியில் உள்ள ஆன்மீக இயக்கங்களோடு நேயமாக - சமாதானமாக இருப்பதே ஆன்மநேய ஒருமைப்பாடு ஆகும் . இதுவே சமரச சத்தியத்தின் ஜீவனுமாகும்

ஆன்மநேய ஒருமைப்பாட்டை அடைந்தவர்கள் ; தங்கள் மார்க்கமல்லாத அடுத்த தேவர்களை பின்பற்றுகிறவர்களை வெறுக்கமாட்டார்கள்

தங்கள் தேவர்களை பின்பற்றாதவர்களையும் வெறுக்கமாட்டார்கள்

இந்த பாடலிலோ முருகனை வழிபடாத அடுத்த மார்க்கத்தாரை வள்ளல்பெருமான் கடுமையாக அர்ச்சிக்கிறார்

வைணவம் ; சாக்தம் ; கௌமாரம் என நாராயணனை ; அன்னையை ; அருவத்தை வழிபடுகிறவர்கள் முருகனை வழிபடுவதில்லை

ஆனால் அவர்களை பேயர்வாய் ; மூடர்தலை ; சொரிந்தஅழுகண் ; வீணர்செவி என்றெல்லாம் திட்டுகிறார்

மதமாச்சர்யம் என்ற மாயை அவரையும் ஆதியில் ஆட்கொண்டு இருந்தது ; ஆனால் இறைவனைக்குறித்த தாகம் அவரை ஏறாதநிலை நிலைமேல் பிற்காலத்தில் ஏற்றி வைத்தது என்பதை நடுநிலையோடு உணர்வோர் பேறுபெற்றோர்

மனிதர்கள் செய்யும் தவறுகளை ;
இயல்புகளை தங்களது சொந்த இயல்பு
போல ஏற்றுக்கொண்டு இறைவனிடம்
மன்னிப்புகோரி வள்ளல்பெருமான்
பாடியபாடல்கள் ஏராளம்

இவையெல்லாம் வள்ளல்பெருமானே அந்த
தவறுகளுக்கு இடம் கொடுத்தவராக
இருந்தார் என்று சொல்வதற்கில்லை ;
ஆனால் தனது சீடர்களிடம் இந்த
தவறுகள் எல்லாம் இருக்கிறது
என்பதற்காக ; அதை அவர்கள் உணர்ந்து
இறைவனிடம் மன்னிப்புகோரி திருந்தி
முன்னேறவேண்டும் என்பதற்காக
பெருமான் அப்படி பாடியிருக்கிறார்
என்பதை பலமுறை நான் எழுதியுள்ளேன்

அதுபோலவே இன்றைய சன்மார்க்கிகள்
தங்களை தனி ஒரு மதம்போல வளர்க்க
முயற்சித்து ; மற்ற மார்க்கங்கள் யாவும்

பொய் ; குப்பையிலே போடு ; ஒதுக்கிவிடு என ஆர்வக்கோளாறு கொள்ளும் காலம் வருகிறது என்பதற்காக தன்னையும் ஒரு மாச்சர்யம் உள்ள நபராக இப்பாடலில் காட்டிக்கொண்டுள்ளார்

இப்படியிருந்த பெருமானார் ; வளர்ந்து எப்படி ஆன்மநேய ஒருமைப்பாட்டுக்கு வந்துசேர்ந்தாரோ அப்படியே நாமும் சகல மதங்களோடும் மார்க்கங்களோடும் சமரசமாக ஆன்மநேய ஒருமைப்பாட்டை கற்றுக்கொள்வதே வள்ளல்பெருமானாருக்கு நாம் செய்யும் குருகாணிக்கை ஆகும்

## கந்தர் கோட்ட மணிமாலை 19
## Kanthar Kotta Manimalai 19

ஐயநின் சீர்பேசு செல்வர்வாய்
நல்லதெள்

அமுதுண் டுவந்ததிருவாய்

அப்பநின் திருவடி வணங்கினோர்
தலைமுடி

அணிந்தோங்கி வாழுந்தலை

மெய்யநின் திருமேனி கண்டபுண்
ணியர்கண்கள்

மிக்கஒளி மேவுகண்கள்

வேலநின் புகழ்கேட்ட வித்தகர்
திருச்செவி

விழாச்சுபம் கேட்கும்செவி

துய்யநின் பதம்எண்ணும்
மேலோர்கன் நெஞ்சம்மெய்ச்

சுகரூப மானநெஞ்சம்

தோன்றல்உன் திருமுன் குவித்தபெரி
யோ‘ர்கைகன்

சுவர்ன்னமிடு கின்றகைகள்

சையம்உயர் சென்னையில்
கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 19

இறைவனின் புகழ் பாடுகிற வாய்
அமுதுண்ணும் வாயாக தகுதி பெற்று
விடும்

துதித்து போற்றுதல் என்பதை சகல ஞானிகளும் முக்கியப்படுத்துகிறார்கள்

எல்லாப்புகழும் இறைவனுக்கே

இறைவனே மிகப்பெரியவன்

இறைவனே பரிசுத்தர்

இறைவனே எல்லா தேவர்களுமாக வெளிப்பட்டிருக்கிறார்

இறைவன் இல்லாத எந்த சிருஷ்டியும் இல்லை

நாம் அறிந்த தேவர்களின் மூலமாக அறியாத இறைவன் ஆட்சி செய்கிறான்

என்று போற்றிப்புகழ்ந்து விட்டு நாம் அறிந்த தேவர்களின் புகழ் பாடுவதால் இறை பேராற்றல் நம்மில் வளர்ந்தோங்கும்

அதை கேட்போர் செவிகளும் அருளில் நிறைந்தோங்கும்

இதற்குத்தான் வாரம் ஒரு முறையாது சத்சங்கம் செல்லவேண்டும்

## கந்தர் கோட்ட மணிமாலை 20
Kanthar Kotta Manimalai 20

உழல்உற்ற உழவுமுதல் உறுதொழில் இயற்றிமலம்

ஒத்தபல பொருள்ஈட்டிவீண்

உறுவயிறு நிறையவெண் சோறடைத் திவ்வுடலை

ஒதிபோல் வளர்த்துநாளும்

விழல்உற்ற வாழ்க்கையை விரும்பினேன் ஐயஇவ்

வெய்யஉடல் பொய்என்கிலேன்

வெளிமயக் கோமாய விடமயக் கோஎனது

விதிமயக் கோஅறிகிலேன்

கழல்உற்ற நின்துணைக் கால்மலர் வணங்கிநின்

கருணையை விழைந்துகொண்டெம்

களைகணே ஈராறு கண்கொண்ட என்றன்இரு

கண்ணேஎ னப்புகழ்கிலேன்

தழைவுற்ற சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. – 20

உழல்கிறேன் என்றால் விலகவும் முடியாமல் சாதிக்கவும் முடியாமல் ;

மெல்லவும் முடியாமல் துப்பவும் முடியாத ஒரு நிலை

உழுதவனுக்கு தார்க்கம்பு மிஞ்சுமா என்று கேட்பார்கள்

மற்ற எல்லா தொழில்களிலும் 90% பாதுகாப்பு உண்டு . திட்டமிடுதலில் பலனும் கிடைக்கும்

ஆனால் என்ன பாடுபட்டாலும் பலனில் நம்பகத்தன்மை இல்லாத ஒரே தொழில் விவசாயம்

சுழன்றும் ஏர் பின்னது உலகம் என பெருமையாய் பேசலாமே தவிர சாபத்தீடான தொழில் போலத்தான் விவசாயம் இருக்கிறது

இதற்கு உண்மையான காரணம் ஆதிமனிதன் இறைவனை சார்ந்து சரணடைந்து வாழ்வதை ஒதுக்கி சுய

அறிவை திறமையை நம்பி வாழ்வோம் என முடிவெடுத்தானோ அப்போது பரத்திலிருந்து அவனை பூமிக்கு அனுப்பும்போது இறைவன் சில சாபங்களை கொடுத்தார்

அதில் மிக முக்கியமானது :

17. பின்பு அவர் ஆதாமை நோக்கி: பூமி உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்; நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் வருத்தத்தோடே அதின் பலனைப் புசிப்பாய்.

18. அது உனக்கு முள்ளும் குருக்கும் முளைப்பிக்கும்; வெளியின் பயிர்வகைகளைப் புசிப்பாய்.

நெற்றி வேர்வை நிலத்தில் சிந்த நீ பாடுபட்டாலும் விவசாயம் முள்ளும் குறுக்கும் தானே தருகிறது . இறைவனின்

சாபம் உள்ளது என்பதாலேயே வள்ளல்பெருமானும் உழல் உற்ற உழவு என்கிறார்

ஆனால் பயிர்வகைகளை நீ உண்டுகொள்க என்பதே இறைவனால் வழங்கப்பட்ட உணவு

19. நீ பூமியிலிருந்து எடுக்கப்பட்டபடியால், நீ பூமிக்குத் திரும்புமட்டும் உன் முகத்தின் வேர்வையால் ஆகாரம் புசிப்பாய்; நீ மண்ணாயிருக்கிறாய், மண்ணுக்குத் திரும்புவாய் என்றார்.

மனித சரீரம் மண்ணிலிருந்து உண்டானது . அதனால் மண்ணிலிருந்து உண்டாகும் பயிர் வகைகளை மனிதன் புசித்தால் அது ஒவ்வாமையை உண்டாக்காது

ஆனால் விலங்குகள் மனிதனுக்கு மாறுபாடான சரீரங்கள் உடையவை

பயிருக்கும் உயிர் இருக்கிறதே ; அதையும் கொலை செய்துதானே உண்கிறோம்

முழுக்க நனைந்த பிறகு முக்காடு எதற்கு கத்தியை தீட்டு நாவுக்கு ருசியாக மசாலா தயார் செய் என அறிவுஜீவிகள் சொல்கிறார்கள்

மண்ணுக்கு மண் ஏற்புடையது ; சத்வ குணங்களை உண்டாக்க கூடியது

ஆனால் மாமிசம் தமோ மற்றும் ரஜோகுணம் உண்டாக்கும்

இறைவனை சரணடைந்து வாழ கற்றுக்கொண்டால் அவர் கொடுத்த உணவு அமிழ்தம் .மண்ணான ஸ்துல சரீரம் ஆவிக்குரிய ஒளி தேகமாக மாற்றப்படும்

15. ஆனபடியால், இவர்கள் தேவனுடைய சிங்காசனத்திற்கு முன்பாக இருந்து, இரவும் பகலும் அவருடைய ஆலயத்திலே

அவரைச் சேவிக்கிறார்கள்; சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கிறவர் இவர்களுக்குள்ளே வாசமாயிருப்பார்.

16. இவர்கள் இனி பசியடைவதுமில்லை, இனி தாகமடைவதுமில்லை; வெயிலாவது உஷ்ணமாவது இவர்கள்மேல் படுவதுமில்லை.

மரணமில்லா பெருவாழ்வு பெற்றுகொண்டால் சகலமும் இறைவனால் நமக்கு கொடுக்கப்படும்

அதுவரை

கண்டதெல்லாம் அநித்தியமே
கேட்டதெல்லாம் பழுதே
கற்றதெல்லாம் பொய்யே
நீர் களித்ததெல்லாம் வீணே
உண்டதெல்லாம் மலமே
உட்கொண்டதெல்லாம் குறையே

உலகியலீர் இதுவரையும்
உண்மையறிந்திலீரே........ என்கிறார்
பெருமானார்

பல தொழில்களை செய்து மலம் ஒத்த
பல பொருட்களை சம்பாதித்து வயிற்றிலே
சோறை அடைத்து ஓதி போல உடம்பை
வளர்த்துக்கொண்டுள்ளேன்

அந்தோ எத்தனை பிறவி வளர்த்தாலும்
அந்த உடம்பு நிரந்தரமானதல்ல .

அதை பொய் என உணரமுடியவில்லையே

மெய் ஞானிகளின் வார்த்தைகளோடு
உணர்வோடு இந்த பாடல்களை நாமும்
கேட்டு கேட்டு உணரலாம் ; உள்ஞானம்
விளையும் என்பதாலேயே நமது
இயல்புகளை தன் இயல்பு போல
பெருமானார் ஏற்று ஏற்று பாடியிருப்பார்

சாதாரண மனிதர்கள் நேரடியாக அருட்பெருஞ்சோதி இறைவனோடு தொடர்பு கொண்டு கருணையை பெறுவது அவ்வளவு எளிதல்ல .

ஏனென்றால் பிரார்திக்கிற நமது ஆத்மாவில் இன்னும் என்ன என்ன பாவங்கள் சாபங்கள் இருக்கிறது என நமக்கு தெரியாது ; ஆனால் இறைவன் நன்கு அறிவார்

அவர் நம்மை பார்க்கும் போது நமது களைகளும் அவரது கண்ணுக்கு தெரியும்

இறைவனுக்கும் நமக்கும் இடையில் கருணையுள்ள சற்குரு முருகனை நாம் துணைக்கு அழைத்தாலோ அவர் நமது களைகளை களைந்து நம்மை இறைவனோடு ஒப்புரவாக்குவார்

வள்ளல்பெருமான் அருட்பெருஞ்சோதி வழிபாட்டுக்கு மாறியது கொஞ்ச காலமே ; ஆனால் அதைவிட பத்து மடங்கு காலம் அவர் தேவர்களை வழிபட்டுக்கொண்டிருந்தார் ; படிப்படியே முன்னேறி கடைசியாக முழுமையான இறைவனிடம் வந்து சேர்ந்தார்

அறிவுக்கொளுந்துகளான சன்மார்க்கிகள் வள்ளல்பெருமான் அறியாமையால் பீடிக்கப்பட்டு தேவர்களை வழிபட்டுக்கொண்டிருந்தார் ; ஞானம் அடைந்தவுடன் அதை விட்டு விட்டு அருட்பெருஞ்சோதி வழிபாட்டுக்கு மாரிக்கொண்டார் என்கிறார்கள்

அதனால் ஞானிகளான நாங்கள் அருட்பெருஞ்சோதியை தவிர அந்த தேவர்களை உதவிக்கு அழைக்க மாட்டோம் ; நாங்கள் பெரிய

ஆளுகளாக்கும் என மேதா விலாசத்தை காட்டிக்கொள்கிறார்கள்

வள்ளல்பெருமானே அப்படித்தான் முன்னேறி வந்திருக்க உன்னைப்போன்ற அற்ப மனிதன் தாழ்மையோடு தேவர்களின் நாமத்தினால் அருட்பெருஞ்ஜோதியிடம் கருணை வேண்ட வேண்டுமா அல்லவா ?

சுத்த மாயை சன்மார்க்கிகளை அகம்பாவிகளாக மாற்றி டேப் ரிகார்டுகளாக மாற்றி வைத்திருக்கிறது

வள்ளல்பிரான் வாழ்க்கை நம்மைப்போன்றோருக்கு தெளிந்த கண்ணாடியாக இருக்கிறது

அவர் பரமண்டலத்தில் எல்லா தேவர்களோடும் ஒப்புரவு ஆகி அவர்களின் நல்லாசியோடு உன்னதமான

அருட்பெருஞ்சோதியை கண்டறிந்து ஒப்புரவு ஆனார்

நம் பிறவியில் குடும்பத்தில் ஏற்கனவே உள்ள அதிதேவர்களை ஒதுக்காமல் அவர்களின் நாமத்தால் இறைவனை வழிபடுகிறேன் என காலை மாலை இருவேளையாவது சொல்லிவிட்டு பிறகு அருட்பெருஞ்சோதியை பலமுறை வழிபாட்டு பாருங்கள்

பல தடைகள் நீங்கி விரைவில் மேன்மை பெறுவீர்கள்

அதிதேவர்களின் நாமத்தால் இறைவனின் பேரருள் நம்மை நிரப்பட்டும்

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

## கந்தர் கோட்ட மணிமாலை 21
## Kanthar Kotta Manimalai 21

வானம்எங் கேஅமுத பானம்எங்கே
அமரர்

வாழ்க்கைஅபி மானம்எங்கே

மாட்சிஎங் கேஅவர்கள் சூழ்ச்சிஎங்
கேதேவ

மன்னன்அர சாட்சிஎங்கே

ஞானம்எங் கேமுனிவர் மோனம்எங்
கேஅந்த

நான்முகன் செய்கைஎங்கே

நாரணன் காத்தலை நடத்தல்எங்
கேமறை

நவின்றிடும் ஒழுக்கம்எங்கே

ஈனம்அங் கேசெய்த தாருகனை
ஆயிர

இலக்கம்உறு சிங்கமுகனை

எண்அரிய திறல்பெற்ற சூரனை மறக்கருணை

ஈந்துபணி கொண்டிலைஎனில்

தானமிங் கேர்சென்னை கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. -21

பரலோகம் என தனித்துவமான அமைப்பு ஒன்று இருக்கிறதா ?

நாத்திகவாதிகளுக்கு அல்ல ஆன்மீகர்கள் பலருக்கே அப்படிப்பட்ட நம்பிக்கை இல்லை

அவர்கள் வெறும் இயற்கை தான் இருக்கிறது என புரிந்துகொண்டிருக்கிறார்கள்

இயற்கை அனுபவமாகவும் இயற்கை ஆனந்தமாகவும் அருட்பெருஞ்சோதி இறைவன் இருப்பதாக வள்ளல்பெருமான் சொல்லியுமுள்ளதை இறைநிலை என்பது படர்க்கை என்றுமட்டுமே சன்மார்க்கிகள் பலர் தவறாக வியாக்கியானம் செய்கிறார்கள்

அருட்பா பாடியபிறகு சித்தி அடையுமுன்பு பெருமான் உபதேசம் செய்ததில் தன் முழு அனுபவங்களையும் தொகுத்து கொடுத்துள்ளார்

அதில்

இங்குள்ள எல்லவர்க்கும் சுவர்க்க நரக விசாரமில்லை. சுவர்க்க நரக

விசாரமுள்ளவர்கள் தங்கள் கருத்தின்படி பலவகைச் சாதனங்களைச் செய்து அற்ப பிரயோஜனத்தைப் பெற்று, முடிவில் தடைப்பட்டுத் திருவருட்டுணையால் கருணை நன் முயற்சியெடுத்துக்கொண்டு, பின் முடிவான சித்தி இன்பத்தைப் பெறுவார்கள். அஃது அருமை.

அவ்விசாரம் பரம், அபரம் என்ற இரண்டு வகையாயிருக்கின்றது.

இவற்றில்
பரம் பரலோக விசாரம், அபரம் இகலோக விசாரம்.

இவ்விரண்டில் இகலோக
விசாரம் விசார மல்ல. சாதாரணமாக ஒருவன் வி-சாரம் செய்து
கொண்டிருக்கின்றானே
யென்றால்,அவ்விசாரம் விசாரமாகாது,

உண்மை
விசாரமுமல்ல.

ஏனெனில், விசார மென்கின்றதுற்குப்
பொருள், வி-சாரம் என்பதில்
வி-சாதாரண உலக _விசாரத்தை மறுக்க
வந்தது, அது மேலும்
பரலோகவிசாரத்தையே குறிக்கும்
பொருட்டு வந்தது.

சுவர்க்க நரக விசாரம் பலருக்கு இல்லை .
அதைக்குறித்த அச்சம் இல்லாமல்
இறைவனை அஞ்சாமல் பலர்
வாழ்கிறார்கள் என வருந்துகிறார்
பெருமானார்

அப்படிப்பட்ட அச்சத்தை போதிக்கும்
மதங்கள் பலவற்றை பின்பற்றுவோர் ;
இறைவனை குறித்த போதிய தெளிவு
இல்லாமல் இருப்பதாகவும் அற்ப

பிரயோஜனம் மட்டுமே பெறுகிறார்கள் என்கிறார்

இருந்தாலும் முடிவு காலத்திலே இறைவனின் திருவருளால் அவர்கள் இரட்சிக்கப்படுவார்கள் என்றே பெருமானார் கூறுகிறார்

இதை ஏன் சொல்கிறேன் என்றால் இன்றைய சன்மார்க்கிகளும் சுவர்க்க நரக நம்பிக்கை அற்றவர்களாகவே இருக்கிறார்கள்

சுவர்க்க நரக விசாரம் இல்லாமல் முழுமையான சித்தியை அடையவே முடியாது

சித்தியடைந்து எங்கு செல்லப்போகிறோமோ அந்த இலக்கு இலட்சியம் தெரியாதவர்கள் முன்னேற்றம் அடைவது எப்படி ?

பெருமானார் ஒளிதேகம் அடைந்தார் என்று பெருமையாக பேசும் சன்மார்க்கிகள் அவர் எங்கு போனார் என்றால் திரு திருவென முழிக்கிறார்கள்

ஜீவகாருண்யமே மோட்ச வீட்டின் திறவுகோல் என்ற பஞ்ச் டயலாக்கை சொல்கிறார்கள்

சாப்பாடு போடுகிறார்கள் ; காய்கறி நறுக்கி போஸ் கொடுக்கிறார்கள் ; அருட்பெருஞ்சோதி அகவல் படிக்கிறார்கள்

மோட்ச வீடு என்பதை அக்கறை இல்லாமல் கவனிக்காமல் விட்டுவிடுகிறார்கள்

நாம் போய் சேர வேண்டிய இடம் மோட்ச வீடு

சொர்க்கம்

இவ்விசயம் மதவாதிகளுக்கு நன்கு தெரிந்திருக்கிறது ; ஆனால் மற்ற விசயங்களில் தெளிவில்லாததால் அற்ப பிரயோஜனம் அடைகிறார்கள்

நல்ல வழி நன்றாக தெரிந்த சன்மார்க்கிகளோ வழியை தெரிந்திருக்கிறார்கள் ; அந்தோ கொடுமையே போய் சேர வேண்டிய இடத்தை மறந்துவிட்டார்கள்

அதனால் திறமையாக பூமியிலேயே சுற்றிக்கொண்டிருக்கிறார்கள்

இந்த பாடலில் பெருமான் தன் சீடர்களின் குறைகளை தன் குறை போல பாடுகிறார்

சொர்க்க நரகமா அப்படி ஒன்றும் இல்லை

அமுத பானம் ஒன்றா அப்படியெல்லாம் இல்லவே இல்லை

சாகாகல்வி

என பெருமான் சொன்னதால் கிளிப்பிள்ளை போல நாங்களும் சொல்லிக்கொண்டிருக்கிறோம்

மற்றபடியாக தேவர்களாக மாறி பரலோக வாழ்வுக்கு செல்லவேண்டும் என்ற முயற்சி எங்களுக்கு சுத்தமாக கிடையாது

இப்படி இருக்கிறவர்களை யார் திருத்துவது என்றால் பரத்திலிருந்து அவ்வப்போது பூமிக்கு அனுப்பபடுகிற இறைமனிதர்களே ஆகும்

வள்ளல்பெருமான் உட்பட அப்படி பூமிக்கு வருவோரெல்லாம் பொதுவாக முருகனே ஆகும்

அப்படி இப்படி வல்லமையான கொடூரமான அசுரர்களை வீரத்தின்

மூலமாக வெற்றி கொண்ட முருகன் அவர்களை அழித்தாரா ?

மறக்கருணை ஈந்தார்

அவர்களை சேவலாக மாற்றி தனக்கு பிரச்சாரம் செய்கிறவர்களாக மாற்றிக்கொண்டார் அல்லவா ?

அதுபோல முருகா சொர்க்க நரக விசாரம் இல்லாத என் சீடர்களான சன்மார்க்கிகளையும் நீ நல்வழிப்படுத்துவாயாக என வேண்டுகிறார் வள்ளல்பெருமான்

## கந்தர் கோட்ட மணிமாலை 22
Kanthar Kotta Manimalai 22

மனமான ஒருசிறுவன் மதியான குருவையும்

மதித்திடான் நின் அடிச்சீர்

மகிழ்கல்வி கற்றிடான் சும்மாஇ ரான்காம

மடுவினிடை வீழ்ந்துசுழல்வான்

சினமான வெஞ்சுரத் துழலுவன் உலோபமாம்

சிறுகுகையி னூடுபுகுவான்

செறுமோக இருளிடைச் செல்குவான் மதம்எனும்

செய்குன்றில் ஏறிவிழுவான்

இனமான மாச்சரிய வெங்குழியின் உள்ளே

இறங்குவான் சிறிதும்அந்தோ

என்சொல்கே ளான்எனது கைப்படான் மற்றிதற்

கேழையேன் என்செய்குவேன்

தனநீடு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 22

மனித மனம் இருக்கிறதே அது யாருக்கும் அடங்காது

6 வகையான தீய குணங்களை பல ரூபங்களில் வெளிப்படுத்தும்

மனதை அடக்கும் வழி தெரிந்து விட்டால் இறைவனை எளிதில் உணரலாம்

எதையும் சாதிக்கலாம்

ஏழை என்னால் என்ன செய்யமுடியும்

பெரிய பெரிய ஞானிகளே தத்தளிக்கும் போது

இறைவனைத்தவிர யார் நம்மை தப்புவிக்க முடியும்

## கந்தர் கோட்ட மணிமாலை 23
## Kanthar Kotta Manimalai 23

வாய்கொண் டுரைத்தல்அரி
தென்செய்கேன் என்செய்கேன்

வள்ளல்உன் சேவடிக்கண்

மன்னாது பொன்னாசை மண்ணாசை
பெண்ணாசை

வாய்ந்துழலும் எனதுமனது

பேய்கொண்டு கள்உண்டு கோலினால்
மொத்துண்டு

பித்துண்ட வன்குரங்கோ

பேசுறு குலாலனாற் சுழல்கின்ற
திகிரியோ

பேதைவிளை யாடுபந்தோ

காய்கொண்டு பாய்கின்ற வெவ்விலங்
கோபெருங்

காற்றினாற் சுழல்கறங்கோ

காலவடி வோஇந்த்ர ஜாலவடி
வோஎனது

கர்மவடி வோஅறிகிலேன்

தாய்கொண்ட சென்னையில்
கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 23

வள்ளல்பெருமானாரைப்போன்ற இறை
தூதுவர்கள் ; இறைவனால்

அனுப்பப்பட்டவர்கள் சாதாரண மனிதர்களின் குற்றங்களை குறைகளை இயல்புகளை தமது குறைகள் போல தம் மீது ஏற்றிக்கொண்டு வேண்டுவார்கள்

அது அந்த வேண்டுதலை நாம் செவியுற்று இயைந்து வேண்டும்போது இறைவன் தமது அடியவருக்கு அருளும் அதே கிருபையை நமக்கும் அருளுவார்

தெளிவு குருவின் திரு வார்த்தை கேட்டல்

என்ற திருமந்திர வரிகள் மனித தரத்தில் குருமார்களாக உள்ள பலருக்கு பொருந்தவே பொருந்தாது

முழுக்குருடனுக்கு முக்கால் குருடனால் வழிகாட்ட இயலும்

அதிலும் அறைக்குருடனால் இன்னும் சிறப்பாக வழிகாட்ட இயலும்

கால் குருடனாலோ சக்கை போடு போட்டு பெருங்கூட்டத்திற்கு குருவாகிவிட முடியும்

ஆனாலும் எவருடைய அருட்பார்வையால் லட்சக்கணக்கானோருக்கு அற்புத அடையாளங்கள் நடக்கிறதோ ; எவருடைய வழிநடத்துதளால் சமுதாய மாறுதல் உண்டாகிறதோ அவர்கள் மனிதர்களிலிருந்து தரம் உயர்ந்து குருவானவர் அல்ல

பரத்திலிருந்து அனுப்பப்படுபவரால் மட்டுமே அத்தகைய அருட்பொழிவை இறைவன் செய்வார்

அவர்கள் காலத்தில் வாழ்ந்தோர் பேறுபெற்றவர்களே

அனுப்பட்டவரான வள்ளல்பெருமானும் மனித மனத்தின் இயல்பை நினைத்து துக்கித்து இறைவனிடம் வேண்டுகிறார்

வாய்விட்டு சொல்லவே முடியாது இறைவா அவ்வளவு தவறு செய்கிறதே எனது மனது

ரட்சிக்கும் உனது திருவடியில் ஒன்றாது மண்ணாசை ;பொன்னாசை ; பெண்ணாசையில் பட்டு உழல்கிறதே

கள் உண்டு பித்து பிடித்து கோலினால் ஒன்றை ஒன்று பேய் பிடித்தவை போல சலிக்காதது ஒன்றை ஒன்று மொத்திக்கொள்ளுமாம் குரங்குகள்

தாங்கள் அடிபடுவது அவற்றிக்கு தெரியாதாம் ;ஆனால் அடுத்தவை அடிபடுவதை பார்த்து ரசிக்குமாம்

அதனால் சண்டையிடுகிற இரண்டு குரங்கும் நிச்சயம் சாகும் என்பார்கள்

கிராமங்களில் இதைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன்

குலாலன் வளைக்கும்போது திகிரியில் சுழலும் பானை விதவிதமாக வளைக்குமாம்

அதுபோலவே தராதரம் இல்லாத தகுதி இல்லாத பல வக்கனைகளை மனது சொல்லிக்கொடுக்குமாம்

பேதைகள் விளையாடுகிற பந்துபோல போகிற பக்கமெல்லாம் போகுமாம்

விலங்குகள் பசியினால் காய்ந்து போய் எங்கே உணவு கிடைக்காதா என அலைபாய்ந்து கொண்டே இருக்குமாம்

இறைதேடுதல் ஒன்றே விலங்குகளின் முழுநேர வாழ்க்கை யாக இருப்பதை சேனல்களில் நீங்கள் பார்க்கலாம்

ஒன்றை ஒன்று வேட்டையாடி சாகின்றன

அலைகின்றன அலைகின்றன அடித்து போராடி அடிபட்டு கொன்று சாப்பிடுகின்றன

பின்னொருநாளில் சாகின்றன

ரஜோ குணம் பலரை அழித்து தன்னை விட வல்லவனிடம் அழிந்துவிடுகிறது

பெரும் காற்றில் சுழன்று திரிவதைப்போல திரிகிறது

எனது கர்மாவின் தொடர்பாக இருந்தாலும் காலத்தின் கோலமாக இந்திரஜாலமோ மாயாஜாலமோ என் மாயைகளை உற்பவித்துக்கொள்கிறது

வள்ளலே உன் கிருபையாலன்றி நான்
ரச்சிக்கப்படுவது அவ்வளவு எளிதல்ல

## கந்தர் கோட்ட மணிமாலை 24
Kanthar Kotta Manimalai 24

கற்றமே லவரொடும் கூடிநில் லேன்கல்வி
கற்கும்நெறி தேர்ந்துகல்லேன்
கனிவுகொண் டுவதுதிரு அடியையொரு
கனவினும்
கருதிலேன் நல்லன்அல்லேன்
குற்றமே செய்வதென் குணமாகும்
அப்பெருங்
குற்றம்எல் லாம்குணம்எனக்
கொள்ளுவது நின்அருட்குணமாகும்
என்னில்என்
குறைதவிர்த் தருள்புரிகுவாய்

பெற்றமேல் வரும்ஒரு பெருந்தகையின்
அருள்உருப்
பெற்றெழுந் தோங்குசுடரே
பிரணவா காராரின் மயவிமல சொரூபமே
பேதமில் பரப்பிரமமே

தற்றகைய சென்னையில் கந்தகோட்
டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி
சண்முகத் தெய்வமணியே. - 24

சன்மார்க்கத்தின் இன்றைய முக்கியமான
குறைபாடு கிணற்றுத்தவளை
மனப்பான்மையாகும்

எப்படியோ வள்ளல்பெருமானின் மீது
பற்று வைத்துவிட்டனர் . அபிமானமும்
பக்தியும் உண்டு

அதனால் ஆளாளுக்கு நாலு பாட்டு ;
பத்துபக்கத்துக்கு விளக்கம் என
சொல்லிக்கொண்டு தங்களுக்கு
தெரிந்ததை மட்டுமே
ஒப்பித்துக்கொண்டுமிருப்பார்கள்

அடுத்தவர் என்ன சொல்கிறார்கள் ;
அவர்கள் ஆதாரம் காட்டும் வேதங்களில்
என்ன இருக்கிறது என காதுகொடுத்து
கேட்கமாட்டார்கள்

எங்க குரு பெரியாளு இப்படி பாடிட்டாரு
அப்பிடி பாடிட்டாரு என வெட்டிபெருமை
பேசி பேசி தாங்களும் பெரிய ஆளு
ஆகிவிட்டோம் என்ற மாயை பலரை
பிடித்து வாட்டிக்கொண்டுள்ளது

தனது சீடர்களுக்கு இந்த மாயை பிடிக்கும்
என தெரிந்த பெருமானார் அதை தனது
குறையாக எடுத்துக்கொண்டு

வேதங்களை கற்றமே லவரொடும்
கூடிநில் லேன்கல்வி கற்கும்நெறி
தேர்ந்துகல்லேன் என வருந்துகிறார்
கிராமத்தில் சொல்வார்கள் ஒன்று சுயபுத்தி
வேண்டும் அல்லது சொல் புத்தியாவது
வேண்டும்

சகல வேதங்களிலும் என்ன உண்மை வெளிப்படை ஆக்கப்பட்டுள்ளது என சுயமாக ஆராய வேண்டும் அல்லது ஆராய்ந்த நல்லடியார்கள் பேசும்போது காதுகொடுத்தாவது கேட்க வேண்டும்

அப்போதுதான் சமரச சன்மார்க்கம் கொண்டுவர முடியும்

அவரவர்கள் அவரவரது கிணற்றில் நின்றுகொண்டுதான் பேசிக்கொண்டிருப்பார்கள் . இது இயல்புதானே

ஆனால் வள்ளல்பெருமானின் உள்ளக்கிடக்கை சகல மதங்களிலும் உள்ள இறைநெறியை உயர்த்தி குறைகளை களைந்து இறைவனோடு சமரசப்படுத்தும் செயலை செய்வதாகும்

இது அவ்வளவு எளிதாக மனிதர்களுக்கு புரியாது ; வரவும் வராது

யார் ஏற்கனவே இறைவனோடு தொடர்புள்ளவர்களோ அவர்களுக்கே புரியும்

நாராயணனது அம்சமான இயேசு கூறினார் :

8. இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்.

9. சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் என்னப்படுவார்கள்.

பலர் இப்பிறவியில் வள்ளல்பெருமானிடத்து வந்த சேர்ந்த ஆத்மசாதகர்களாக இருப்பார்கள்

அதனால் குரு பெருமை பேசுவதை
உயர்ந்த ஆன்மீகமாக
கருதிக்கொள்கிறார்கள்

இறைவனிடத்து கொஞ்சமேனும்
நேரடித்தொடர்பு உள்ளவர்களுக்கோ
சமாதனம் எவ்வளவு உயிர்ப்புள்ள
விஷயம் என்பது புரியும்

யாரிடம் தெய்வீக இயல்பு உள்ளதோ
அவர்கள் எதனை கொடுத்தாவது
சமாதானம் செய்கிறவர்களாக இருப்பார்கள்

வள்ளல்பெருமான் பூமிக்கு
அனுப்பப்பட்டதன் நோக்கம் சண்டை
போட்டுக்கொண்டு திரியும் சகல
மதங்களுக்கிடையில் நல்லிணக்கத்தை
உண்டாக்குவதும் ஆகும்

அதற்கான நபர்களை சன்மார்க்கத்தில் கொண்டுவந்து சேர்ப்பதும் அவரது பல பிறவி சீடனான எனது பணியுமாகும்

பெருமான் கூறுகிறார் ; இறைவா உள்ளார்ந்த அன்போடு உனது திருவடியை சரண் அடைகிறவர்கள் உன்னை உணர்ந்தவர்கள் ஆவார்கள்

இறைவன் ஒருவர் இருக்கிறார் என பிரகிருதியை உணராமல் அது வெறும் இயற்கை என உளறித்திரியும் பலரும் சன்மார்க்கத்தில் வந்து சேர்வார்கள்

அவர்களுக்கு சமாதானத்தின் மேன்மை புரியாது

குற்றமே புரிவது மனித இயல்பு ; ஆனாலும் அவர்களை மன்னித்து ரட்சிப்பது உமது இயல்பாகும்

இறைவனின் தேவர்கள் எவருக்கும்
இறைவனது குணம் இருக்கும்

இறைவனைப்போல ஆகும்
மனிதர்களுக்கும் இறைவனைப்போல
குணம் இருக்கும் என்றால்
ஏற்றுக்கொள்ளும் மனிதர்கள் பரத்திலுள்ள
தேவர்களுக்கும் இறைவனின் குணம்
இருக்கும் என்றால் ஏற இறங்க
பார்க்கிறார்கள்

அருட்பெருஞ்சோதியை தவிர யாரையும்
மதிக்கலாகாது ; அவர்கள் வெறும்
தத்துவம் என்றெல்லாம் உளறுகிறார்கள்

ஆனால் பெருமானார் அந்த வயதில்
முருகனிடம் ஆன்மிகம்
பழகிக்கொண்டிருந்த காலத்தில்
முருகனுக்கும் அதே இயல்பு இருப்பதாக
காண்கிறார்

பெற்றம் என்ற அறிய தமிழ் வார்த்தையை நந்திக்கு பெருமான் சூட்டியுள்ளார்

கரு சுமந்து பிரசவித்து பாலூட்டி வளர்ப்பவை பெற்றம்

பெற்றவை தன் பிள்ளைகளை முடிந்த அளவு பேணுவதிலேயே அக்கறையாக இருக்கும்

அவ்வளவு இரக்கம் உள்ளவை மேலே பயணிக்கிற சிவன் இன்னும் எவ்வளவு இரக்கம் உள்ளவராக இருப்பார்

பெற்றமேல் வரும்ஒரு பெருந்தகையின் அருள்உருப்
பெற்றெழுந் தோங்குசுடரே
பிரணவா காராரின் மயவிமல சொரூபமே
பேதமில் பரப்பிரமமே

முருகனை மிக ஆழமாக உணர்ந்தவர் பெருமான்

சிவனின் அருள் உருப்பெற்று உயர்ந்த சுடர் முருகன் என்கிறார்

உருவிலோ அவர் பிரணவம் எவரோ அந்த பரப்பிரம்மம் நாராயணனது விமல சொருபம் முருகன்

சிவ நாராயணனது சமரசம் முருகன்

பேதமில்லாத பரப்பிரம்மம்

அப்படியானால் பேதமுள்ள பிரம்மமும் இருக்கிறது தானே

சிவன் மட்டுமே நாராயணன் மட்டுமே அல்லாஹ் மட்டுமே அருட்பெருஞ்சோதி மட்டுமே என பேதம் பேசுவதே இந்த மாச்சரியம் என்ற தீய குணமாகும்

வள்ளல்பெருமானின் முதல் குருவாகிய முருகனோ சமரசத்தின் வடிவானவர்

மதமான பேய் மட்டுமல்ல மாச்சர்யம் பேசுகிற பிசாசும் சன்மார்க்கிகளை விட்டு ஓடட்டும் ; பின்பு முன்னணிப்படை யாக இருந்து உலகின் சகல பேதங்களையும் களைவோம்

சிவன் நாமத்தாலும் அருட்பெருஞ்சோதி
நாராயணன் நாமத்தாலும்
அருட்பெருஞ்சோதி
அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

வள்ளல் மலரடி வாழ்க
சமரச சன்மார்க்கம் ஓங்குக

பாய்ப்பட்ட புலிஅன்ன நாய்ப்பட்ட கயவர்தம்

பாழ்பட்ட மனையில்நெடுநாள்

பண்பட்ட கழுநீரும் விண்பட்ட இன்னமுது

பட்டபா டாகும்அன்றிப்

போய்ப்பட்ட புல்லுமணி பூப்பட்ட பாடும்நற்

பூண்பட்ட பாடுதவிடும்

புன்பட்ட உமியும்உயர் பொன்பட்ட பாடவர்கள்

போகம்ஒரு போகமாமோ

ஆய்ப்பட்ட மறைமுடிச் சேய்ப்பட்ட நின்அடிக்

காட்பட்ட பெருவாழ்விலே

அருள்பட்ட நெறியும்மெய்ப் பொருள்பட்ட நிலையும்உற

அமர்போக மேபோகமாம்

தாய்ப்பட்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 25

வள்ளலார் சின்ன வயதிலேயே கவிதைகள் புனையும் நாட்டம்

இருந்ததால் ; தன்னை ஒரு புலவர் என்பதாக அங்கீகரித்துக்கொள்கிறார்

புலவர்கள் வாழ்க்கைக்கு என்ன செய்வார்கள் ?

அரசர்களையோ ; செல்வந்தர்களையோ அண்டி புகழ்ந்து பாடி பரிசில் பெறுவார்கள்

அல்லது நாடக குழுக்களில் சேர்ந்து பாடி நடிப்பார்கள்

இக்காலத்திய சினிமா உலகம் போல அக்கால கலைத்துறை இல்லை

மிகுந்த வறுமை ; அவமானம் பட்டே அரைக்கஞ்சி குடிப்பார்கள்

வள்ளல்பெருமான் முருகனிடம் அந்த இழி வாழ்வு தனக்கு வேண்டாம் என்று வேண்டுகிறார்

செல்வந்தர்கள் பெரும்பாலும் எப்படி இருப்பார்கள் ; பாய்ந்து இரையை பிடிக்கிற புலியை போல பொருள் சம்பாதிப்பதிலேயே கவனமாக இருப்பார்களாம்

அதுமட்டுமல்ல அதற்காக நாயாக அலைவார்களாம்

இப்படி பொருள் சேர்த்தோர் குடும்பத்தையே அண்டி ; அவர்களை புகழ்ந்து பரிசில் பெறுவது அவ்வளவு எளிதான காரியமும் அல்ல .

அவர்கள் வீட்டு பழங்கஞ்சி யை காத்திருந்து பெறுவது தேவாம்ரிதத்தை பெறுவதற்கு பிரயத்தனம் செய்வதை விட கடினமாக இருக்குமாம்

அல்லது புல்லு வெட்டியாவது பிழைப்போம் ; கல்லுடைத்தாவது கஞ்சி

குடிப்போம் என்பதும் பிகீரத பிரயத்தனம் .
தன்மானத்தோடு உழைத்தாலும் தவிடும்
உமியும் தான் பலனாக இருக்குமாம்

இப்படி எல்லாம் இல்லாமல் பிறகு
எப்படிப்பட்ட வாழ்க்கை வள்ளலாருக்கு
வேண்டுமாம்

தாய் போன்ற கருணை உள்ள மறை
முடியோன் சிவனின் சேயோன்
முருகனுக்கு அடிமையாக ஆகி
கொண்டால் ; அருள் நிரம்பிய வாழ்வும் ;
மெய்ப்பொருள் நிரம்பிய நிறைவு மனமும்
; இறைவனால் போதிய அளவு
கிடைக்கப்பெறும் நிம்மதியும்
கிடைக்குமாம்

உலகத்திற்கு அடிமையாக இருந்து
உலழுவதை விட இறைவனுக்கும் ;
தேவர்களுக்கும் அடிமை
ஆக்கிக்கொண்டால் நிறைவான

நிம்மதியான வாழ்வை பெறலாம் என்கிறார் 9 வயது வள்ளலார்

அவர் எண்ணம் போலவே அவரது வாழ்க்கையும் இருந்தது

சேவலம் கொடிகொண்ட நினைஅன்றி வேறுசிறு

தேவரைச் சிந்தைசெய்வோர்

செங்கனியை விட்டுவேப் பங்கனியை உண்ணும்ஒரு

சிறுகருங் காக்கைநிகர்வார்

நாவலங் காரம்அற வேறுபுகழ் பேசிநின்

நற்புகழ் வழுத்தாதபேர்

நாய்ப்பால் விரும்பிஆன் து'ய்ப்பாலை நயவாத

நவையுடைப் பேயர் ஆவார்

நீவலந் தரநினது குற்றேவல் புரியாது

நின்றுமற் றேவல்புரிவோர்

நெல்லுக் கிறைக்காது புல்லுக் கிறைக்கின்ற

நெடியவெறு வீணராவார்

தாவலம் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 26

சேவல் கொடி உடையவன் முருகன்

ஏனிந்த சேவல் கொடி

சூரன் என்ற அசுரனை வென்ற முருகன் அவனை கொல்லவில்லை

பதிலாக அவனை திருத்தி ; பிறரை விளிப்படைய செய்யும் ஆசிரியனாக மாற்றிக்கொண்டார் முருகன்

இதுவே நற்செய்தி

14. இவ்விதமாக, இந்தச் சிறியரில் ஒருவனாகிலும் கெட்டுப்போவது பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவின் சித்தமல்ல.

ஞானம் என்பது ஒன்றுமே அறியாமல் தூய்மையாக இருப்பது அல்ல

புத்தம் புதிதாக படைக்கப்பட்ட மனிதன் இயல்பில் சுத்தமானவனாக இருப்பான்

ஆனால் அவனுக்கு எந்த அனுபவமோ ஞானமோ இருக்காது

யார் சகல தவ்ருக்குள்ளும் விழுந்து ; அதன் நன்மை தீமை அனுபவங்களை

உணர்ந்து ; அது இருந்தாலும் வேண்டாம் என்ற நிலை அடைகிறானோ அப்போதே ஞானம்

இப்படி உலக வாழ்வின் அழகுக்கும் ; மாயைக்கும் இடம் கொடுத்து ஆட்டம் ஆடி அசுரனைப்போல ஆனாலும் ; அவனை ரட்சிக்கும் படியாக குரு வருவார்

ரட்சித்தாலே சேவலம்

அது கூவி கூவி நம்மை விழிப்படைய செய்யும்

ஆகவே நம்மை ரட்சிப்பதை தனது தொழிலாக கொண்டவர் ஞான சற்குரு முருகன்

அவரை விட்டுவிட்டு மற்ற தேவர்களை பக்தி செய்வோர் ; சிறு மதியுடைய காக்கை போன்றவர்கள்

செங்கனி இருக்க காக்கை
வேப்பங்கனியை நாடி உண்ணுமாம்

9 வயது பிள்ளையாக கந்தர் கோட்டம்
சென்று அடிக்கடி முருகனை வழிபட்டு
வந்தார் வள்ளலார்

பிறவிக்குணம் என்பார்களே அது 9 வயது
முதல் சித்தி ஆகும் வரை வள்ளலார் கூட
இருந்தது

முதலில் முருகன் ; வடிவாம்பிக்கை
இப்படி படிப்படியே ஒவ்வொரு தேவரின்
தொடர்பும் அனுபவமும் உண்டாகும்
போதும் ; அவரைப்போல உண்டுமா என
பாடியிருப்பார் வள்ளலார்

கடைசியில் 6 ஆம் திருமுறை பாடும்போது
அருட்பெருஞ்ஜோதியோடு தொடர்பு
கிடைக்கிறது ; உடனே இவரைத்தவிர
வேறு யாரையும் கும்பிடாதே ; வேஸ்ட் ;

பிட்சு ; உடைப்பிலே போடு என பாடிவிட்டார்

இது வள்ளலாருக்கு மட்டுமல்ல ; கவிஞர்களுக்கே உரிய புகழ்ச்சி அணி

இது பெருமையாக சொல்லப்பட்ட ஒரு விஷயமே தவிர ; அப்படியே வார்த்தையின் படி பொருள் சொல்லக் கூடாது

6 ஆம் திருமுறையில் மட்டுமல்ல ; முதல்முதலாக 9 வயதில் பாடியபோது கூட முருகனைத்தவிர யாரையும் கும்பிட வேண்டிய அவசியம் இல்லை என்றுதானே பாடியுள்ளார் என்பதை சன்மார்க்கிகள் கொஞ்சம் நிதானிக்க வேண்டும்

நன்றாக பாருங்கள் முருகனைத்தவிர வேறு தெய்வத்தை சிந்தை செய்வோர் காக்கையை போல சிறு மதியாளர்கள் ;

நவநாகரீக பேயர்கள் ; வீணர்கள் என வரிசையாக அர்ச்சித்திருக்கிறார் பாருங்கள்

இதிலிருந்து நாம் புரிந்துகொள்ள வேண்டியது ; கவிஞர்களுக்கே உரிய உயர்த்திப்பாடுதல் அவ்வளவே

மற்றவர்களை ஒதுக்கு என எடுத்துக்கொள்ளவே கூடாது ; அவர்களோடு அருட்பெருஞ்ஜோதி வழிபாட்டை முக்கியப்படுத்து என்பதே ஆகும்

எதையாவது ஒதுக்கு என்றாலேயே அங்கே தீவிரவாதம் வந்துவிடுகிறது

மற்ற மதங்களையெல்லாம் ஒதுக்கு ; சன்மார்க்கத்தை மதமாக பிடித்துக்கொள் என்பதுபோல மதவெறி பிடித்தவர்களாக ; பிற மதங்களை அதை வளர்த்த அருளாளர்களை அற்பமாக எண்ணுகிற மத

துவேஷம் சன்மார்க்கிக்களை பிடித்துக்கொண்டது

இதற்கு காரணம் அடிப்படையில் வள்ளல்பெருமான் பக்தி யோகி என்பதை சன்மார்க்க மடத்தை இடிக்க வந்து டேரா போட்டுள்ள நாத்தீகவாதிகள் உணரவில்லை

சும்மா வாயிலே அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை என ஒரு லட்சம் தடவை ஒப்பித்தாலும் அங்கு பக்தி வர வாய்ப்பு இல்லை

ஆகவே நாத்தீக கசடர்கள் ; நல்ல மடமடா என சன்மார்க்கத்தில் புகுந்து ; ஆளாளுக்கு பத்து பாட்டுக்கு விளக்கம் சொல்லி சன்மார்க்கிக்களின் ஜீவனை கெடுத்து விட்டார்கள்

குரான் 2:14. இன்னும் (இந்தப் போலி விசுவாசிகள்) பக்தி கொண்டிருப்போரைச் சந்திக்கும் போது, “நாங்கள் பக்தி கொண்டிருக்கிறோம்” என்று கூறுகிறார்கள்; ஆனால் அவர்கள் தங்கள் (தலைவர்களாகிய) ஷைத்தான்களுடன் தனித்திருக்கும்போது, “நிச்சயமாக நாங்கள் உங்களுடன்தான் இருக்கிறோம்; நிச்சயமாக நாங்கள் (அவர்களைப்) பரிகாசம் செய்பவர்களாகவே இருக்கிறோம்” எனக் கூறுகிறார்கள்.

பிரமன்இனி என்னைப் பிறப்பிக்க
வல்லனோ

பெய்சிறையில் இன்னும்ஒருகால்

பின்பட்டு நிற்குமோ முன்பட்ட
சூட்டில்

பெறுந்துயர் மறந்துவிடுமோ

இரவுநிறம் உடைஅயமன்
இனிஎனைக் கனவினும்

இறப்பிக்க எண்ணம்உறுமோ

எண்ணுறான் உதைஉண்டு
சிதைஉண்ட தன்உடல்

இருந்தவடு எண்ணுறானோ

கரவுபெறு வினைவந்து நலியுமோ
அதனைஒரு

காசுக்கும் மதியேன்எலாம்

கற்றவர்கள் பற்றும்நின் திருஅருளை
யானும்

கலந்திடப் பெற்றுநின்றேன்

தரமருவு சென்னையில் கந்தகோட்
டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 27

பூமிக்கு வருவிக்க உற்றவர் வள்ளல்பிரான்

மனித சரீரத்தில் வந்திருந்தாலும் அந்த 6
வயதிலும் தான் மரணமில்லா

பெருவாழ்வு பெற்றவர் என்ற சுயாதீனம் இருந்திருக்கிறது

பிரமன் என்னை பிறப்பிக்க வல்லவனோ என்கிறார்

சரி எமதர்ம ராஜா இருக்கிறாரே அவரால் மரணம் நேர கூடுமல்லவா

வள்ளலார் சொல்கிறார் ; ஏற்கனவே நான் மரணமில்லா பெறுவாழ்வு அருளப்பட்டு விட்டேன்

முன்பொருமுறை வழக்கம் போல என்னை மரணத்தில் ஆழ்த்த வந்து எமன் பட்ட வடுவை அவர் மறந்திருக்க மாட்டார்

இப்படித்தான் ஞானிகள் தாங்கள் யார் என்பதை சூசகமாக அறிவிப்பார்கள்

மார்க்கண்டேயனாக தான் அவதரித்திருந்த போது தன்னை மரணத்திலிருந்து

விடுவிக்க அதிதேவர் சிவன் வந்தாரல்லவா அப்போது எமனுக்கு பட்ட வடுவை அவர் மறந்திருக்க வாய்ப்பு இல்லை

சரி மனித சரீரத்தில் வந்ததாலேயே வந்து பற்றுகிற மாயைகள் ; அவைகளால் நான் செய்த செய்யப்போகிற வினைகள் என்னை வந்து கெடுத்துவிட வாய்ப்பு உள்ளதல்லவா

நாள் என் செய்யும் பெற்ற வினைதான் என் செய்யும் குமரேசர் இருதாளும் தண்டையும் சிலம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே என திருப்புகழ் உள்ளதல்லவா

அதே கருத்தை வள்ளல் நம்பிக்கையோடு பறை சாற்றுகிறார்

குரு பார்க்க கோடி பாவம் தீரும்

அந்த சற்குருநாதன் முருகனை குருவாக பெற்றிருக்கிறேன் ; அவனின் அருளில் கலந்து நிற்கிறேன்

ஆகவே வினைகளைப்பற்றி நான் கவலைப்பட அவசியமில்லை

இரவுநிறம் உடைஅயமன் இனிஎனைக் கனவினும்
இறப்பிக்க எண்ணம்உறுமோ
எண்ணுறான் உதைஉண்டு சிதைஉண்ட தன்உடல்
இருந்தவடு எண்ணுறானோ

இது வள்ளலார் பாடிய வரிகள்

தன்னை மரணத்திற்கு ஆட்பாடுத்தும்படி எமன் கனவிலும் எண்ணமாட்டார் . ஏனென்றால் ஏற்கனவே ஒரு முறை அவருக்கு காயம் உண்டானதை அவர் மறக்கமாட்டார் என்கிறார்

Kanthar Kotta Manimalai 28

நீர்உண்டு பொழிகின்ற கார்உண்டு விளைகின்ற

நிலன்உண்டு பலனும்உண்டு

நிதிஉண்டு துதிஉண்டு மதிஉண்டு கதிகொண்ட

நெறிஉண்டு நிலையும் உண்டு

ஊர்உண்டு பேர்உண்டு மணிஉண்டு பணிஉண்டு

உடைஉண்டு கொடையும்உண்டு

உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தம்உறும்

உளம்உண்டு வளமும்உண்டு

தேர்உண்டு கரிஉண்டு பரிஉண்டு
மற்றுள்ள

செல்வங்கள் யாவும்உண்டு

தேன்உண்டு வண்டுறு கடம்பணியும்
நின்பதத்

தியானமுண் டாயில்அரசே

தார்உண்ட சென்னையில் கந்தகோட்
டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 28

உண்டு உண்டு உண்டு உண்டு
27 முறை உண்டு உண்டு என 9
வயதிலேயே வள்ளலார் பாடியிருக்கிறார்

அருளாளர்கள் பிறவியிலேயே ஞானம் ; புலமை உடன் பிறக்கிறார்கள்

இப்படி பாடியவரை பார்த்த பிறகு அந்த இலக்கண வாத்தியார் என்ன சொல்வார்

ஐயா ! உங்கள் தம்பிக்கு பாடம் சொல்லிக்கொடுக்க எனக்கு தகுதியில்லை என கையெடுத்து கும்பிட்டுவிட்டு போய் விட்டார்

இந்த அமானுஷ்ய தம்பியை என்ன செய்வது என தெரியாமல் அவரும் தண்ணீர் தெளித்து விட்டு விட்டார்

அவரை அவரது ஆவிமண்டல குருநாதர் தனிகைமணி பிரானே ரகசியமாக வழிநடத்தினார்

இந்த தனிகைமணியாரே சாலையாரையும் வழிநடத்தியவர்

சாலையார் ஒரு கவியில்
தனிகைமணியாரை முகமது சாலிக் என
சொல்கிறார்

முகமது சாலிக் என்ற அரேபியா
அருளாளர் ஒருவர் இறை நெறியில்
தேறியபோது இறைவன் அவரை தமிழகம்
சென்று திருத்தணி முருகனிடம்
கற்றுத்தேறுக் என அனுப்பியதால்
திருத்தணி குகை ஒன்றில் பல்லாண்டு
தியானம் செய்து பிரணவ தேகம் சித்தித்து
தன்னை தனிகைமணி பிரான் என
சொல்லிக்கொண்டார் என்பது மரபு

இவர் வள்ளலாரையும் சாலையாரையும்
தயாரித்து வழிகாட்டியதாகவும் மரபு

இருவரும் ஒரே கொடியை ஏற்றியுள்ளதும்
; வரப்போகிற ஆண்டவர் பலரை
உயிர்த்தெழ செய்வார் என்றதும் அறிக

வள்ளலாரும் சாலையாரும் ஒருவரை ஒருவர் கணடதில்லை என்பார்கள்

ஆனால் ஞான வழி செய்தி யாதெனில் ; தனிகையார் பரமேறுமுன்பு இருவரையும் செஞ்சி மலைக்காடுகளில் அழைத்து உபதேசித்ததாக ஒரு குறிப்பு உண்டு

செஞ்சியிலிருந்து திருவண்ணாமலை நோக்கி பேருந்தில் சில ஆண்டுகளுக்கு முன்பு பயனித்துக்கொண்டிருந்த போது மலை உச்சியில் தெரியும் ஒரு சதுர கட்டிடம் ; முருகன் கோவில் என்றும் அங்குதான் இந்த சந்திப்பு நிகழ்ந்ததாகவும் தரிசனம் ; ஏஞ்சல் டாக் கேட்டேன்

பிறிதொரு சமயம் நானும் சில சன்மார்க்கிக்களும் காரில் பயணித்த போது அக்கோவிலின் அடியில் சாலையில் காரை நிறுத்தி

அங்கிருந்தவாறே தியானித்து பெரும் ஆற்றலை கிடைக்கவும் பெற்றேன்

இன்றைய சன்மார்க்கிக்கள் தனிகைமணியாரின் குருகுலம் யுக மாறுதலுக்கான ஒரு திட்டத்தை தயாரித்து வருகிறது ; வரப்போகிற சமரச வேதம் ; சகல புற சமயங்களையும் நல்லிணக்கப்படுத்தும் பணி என்பதை இன்னும் உணரவில்லை

அவர்கள் இன்னும் ஒரு புது மார்க்கத்தை உற்பத்தி செய்து ; மத சண்டை குழப்பம் செய்யவே முற்படுகிறார்கள்

ஆனாலும் சமரச வேதாந்தியின் வருகை நிச்சயம்

Kanthar Kotta Manimalai 29

உளம்எனது வசம்நின்ற தில்லைஎன் தொல்லைவினை

ஒல்லைவிட் டிடவுமில்லை

உன்பதத் தன்பில்லை என்றனக் குற்றதுணை

உனைஅன்றி வேறும்இல்லை

இளையன்அவ னுக்கருள வேண்டும்என் றுன்பால்

இசைக்கின்ற பேரும்இல்லை

ஏழையவ னுக்கருள்வ தேன்என்றுன் எதிர்நின்

றியம்புகின் றோரும்இல்லை

வளமருவும் உனதுதிரு அருள்குறைவ தில்லைமேல்

மற்றொரு வழக்கும்இல்லை

வந்திரப் போர்களுக் கிலைஎன்ப தில்லைநீ

வன்மனத் தவனும்அல்லை

தளர்விலாச் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 29

குரு என்ற பதத்திற்கு அர்த்தம் இருளை நீக்குகிறவர் என்பதாகும்

மாகாகுரு வள்ளல்பிரானும் நம்மைப்போன்ற சீடர்கள் பக்குவம் அடைவதற்காக நமது குறைகளை தனது குறையாக பாவித்து நம் கஸ்ட நஸ்டத்தை இறைவனிடம் ஒப்புவிக்கிறார்

இறைவன் மனம் திருந்துவோர்க்கு மிக சமீபமாக இருப்பார் என்பது இயேசுவின் வாக்காகும்

தன்னை உணர்ந்து தனது இயலாமையை ஒப்புவிப்போருக்கும் இறைவன் மிக மிக சமீபமாக இருப்பார்

வள்ளல்பிரானும் மனம் கசந்து இறைஞ்சுகிறார் என் உள்ளம் என் பேச்சை கேட்பதில்லை அது என்னை வம்பாக கவிழ்த்து விடுகிறது

பக்குவப்பட்ட ஞானிகளுக்கு மனம் கைவசப்படும் ; நம்மைப்போன்றோருக்கு கைவசப்படுத்துவது அவ்வளவு எளிதல்ல

மனம் மிக சிறந்த கார்ப்பரேசன் குப்பைத்தொட்டி எதைவேண்டுமானாலும் தனக்குள் இழுத்து கொட்டிக்கொள்ளும்

நாம் தற்செயலாக காதில் கேட்ட ஒரு விசயம் நமக்குள்ளிருந்து திடீரென வெளிவந்து நம்மை செய்யவைத்து விடும்

வள்ளலார் விண்ணப்பிக்கிறார் என் தொல்லை வினைகள் கர்மங்கள் என்னை விடுவதாக இல்லை

அதுதான் அப்படியா நாம் எவ்விசயத்தில் தடுமாரி தடுமாறி விழுகிறோமோ அதில் பக்குவப்பட்ட முன்னோடி ஒருவரை நாம் சந்தித்து அவர் நமக்காக இறைவனிடம்

பரிந்துரைத்து வேண்டினால் நிச்சயம் இறைவன் நம்மை விடுவிப்பார்

அப்படிப்பட்ட முன்னோடிகளாவது எனக்காக பரிந்துரைத்து மன்றாடுகிரார்களா என்றால் அதுவும் எனக்கு இல்லை

இந்த பராரிக்கு எதற்காக இறங்கினாய் என வழக்காடுகிரவர்களாவது இருக்கிறார்களா எனவும் தெரியவில்லை

இறைவா நீ வன்மனத்தவனும் இல்லை உன்னை மன்றாடினால் இல்லை என்றும் சொல்லமாட்டாய்
வளத்தை அருள்வதும் என் மாயை அருகுவதும் ஒன்றாக நடக்கும் காரியம்

என் மாயைகளை கடந்து வென்று உன் பேரருளை நான் பெற்றுக்கொள்ள அருள் புரிவாயாக

Kanthar Kotta Manimalai 30

எத்திக்கும் என்உளம் தித்திக்கும் இன்பமே

என்உயிர்க் குயிராகும்ஓர்

ஏகமே ஆனந்த போகமே யோகமே

என்பெருஞ் செல்வமேநன்

முத்திக்கு முதலான முதல்வனே மெய்ஞ்ஞான

மூர்த்தியே முடிவிலாத

முருகனே நெடியமால் மருகனே சிவபிரான்

முத்தாடும் அருமைமகனே

பத்திக் குவந்தருள் பரிந்தருளும் நின்அடிப்

பற்றருளி என்னைஇந்தப்

படியிலே உழல்கின்ற குடியிலே ஒருவனாப்

பண்ணாமல் ஆண்டருளுவாய்

சத்திக்கும் நீர்ச்சென்னை கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 30

முருகனை சற்குருவாக அடையப்பெற்றவர்களுக்கு எந்த திக்கில்

சென்றாலும் ; அங்கு நல்லதே நடப்பதால் உள்ளம் இன்புறலாமாம்

என் உயிர் இறைவனின் அம்ஸமானது என்று அறிவேன்

அந்த உயிர்க்கு உறுதுணையாக இருக்கும் தேவன் முருகன்

யோகங்களை வாரிவழங்கும் ஞான சற்குரு

துவளாத செல்வத்தையும் வாரிவழங்குவான்

உலக வாழ்வில் போகங்களை அளவோடும் முறையோடும் அனுபவிக்க கற்றுக்கொடுப்பான் ; ஆகையால் ஆனந்த வாழ்வை உறுதிப்படுத்துபவன்

அதனால் ஒவ்வொரு காரியத்திலும்
நன்மை எதுவோ அந்த முக்தியை
வித்தாக இருந்து அருளுபவன்

முக்தி என்பது நிலை முன்னுறு சாதனம்
என்பார் வள்ளலார்

ஒரே நாளில் சித்தி அடைந்துவிட
முடியாது

ஒவ்வொரு காரியத்திலும் தனித்தனியாக
நன்மை தீமை உணர்ந்து நன்மை தீமை
இரண்டையும் கடந்த நிலை ஒரு முக்தி

இப்படி பல முக்திகள் முடிவில்லாதவை

அவைகளை பல பிறவிகளில் கடந்து
கடந்து வர ஞான குருகுலத்தின்
முதல்வன் அவன்

தேவர்களில் இரண்டு பெரிய பிரிவு நாராயணனை அதிதேவராகவும் சிவனை அதிதேவராகவும் கொண்டு இயங்குகிறது

முருகன் நாராயணனின் மருமகன் ; சிவனின் மகன்

அதனால் சமரச வேதத்தின் அமசமானவன்

பக்தி செய்வோரை மகிழ்ந்து அவர்களை இரண்டு அதிதேவர்களிடத்திலும் பரிதுரைப்பானாம் முருகன்

முருகன் சிவ விஷ்ணு கலப்பானவன்

முருகனும் பல அவதாரங்கள் பூமியில் வந்துகொண்டுதான் இருக்கிறான்

ஐயனார் என்றறியப்படுகிற அய்யப்பன் முதலான பல அவதாரங்கள் முருகனின் அம்ஸமே ஆகும்

அப்படி ஏதாவது ஒரு அவதாரத்தை பற்றிக்கொண்டு பக்தியிலும் பின்பு யோகத்திலும் வளர்ந்தோமானால் ; உலக வாழ்வில் பாவங்களில் வீழ்ந்த பலர் அடுத்த பிறவியில் வறுமையிலும் துன்பங்களிலும் அல்லாடுகிறார்களே ; அப்படி ஆகாமல் நம்மை உயர்த்தி உயர்த்தி விடுவார்

நான்கொண்ட விரதம்நின் அடிஅலால் பிறர்தம்மை

நாடாமை ஆகும்இந்த

நல்விரத மாம்கனியை இன்மைஎனும் ஒருதுட்ட

நாய்வந்து கவ்விஅந்தோ

தான்கொண்டு போவதினி என்செய்வேன் என்செய்வேன்

தளராமை என்னும்ஒருகைத்

தடிகொண் டடிக்கவோ வலியிலேன் சிறியனேன்

தன்முகம் பார்த்தருளுவாய்

வான்கொண்ட தெள்அமுத வாரியே மிகுகருனை

மழையே மழைக்கொண்டலே

வள்ளலே என்இருகண் மணியேஎன் இன்பமே

மயில்ஏறு மாணிக்கமே

தான்கொண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே. - 31

மணிமாலையின் நிறைவுப்பாடல் ; பெரும்பாலும் வெற்றி ; போற்றி என்பது போல கவிஞர்கள் முடிப்பார்கள்

ஆனால் வள்ளல்பெருமானோ தன் அச்சத்தை - கையறு நிலையையே வெளிப்படுத்துகிறார்

நான் கொண்ட விரதம் ; இறைவனையும் இறை சக்திகளையும் ; குருநாதனான முருகனையே எதற்காகவும் சார்ந்திருக்க வேண்டும் என்பது

உணவு ; உடை ;இருப்பிடம் அடிப்படை தேவைகளுக்காக உலகத்தில் பொருள் தேட உழைக்கவும் வேண்டும்

நேரத்தை அதில் செலவிட்டு பிறகு உன்னையும் தேடினால் ரெண்டும் கெட்டானாக இருக்க வேண்டும்

அப்படி இல்லாமல் நீயே என் தேவைகளை சந்தித்து விடுகிறேன் என வாக்கு கொடுத்தீரானால் ; நான் உலகத்தின் பக்கம் போகும் படியாக இருக்காது

இல்லாமை என்ற துட்ட நாய் என் விரதத்தை கவ்விக்கொண்டு போகிற சூழ்நிலையில் தானே உள்ளேன்

என் செய்வேன் என் செய்வேன்

ஆனால் அவருக்கு தணிகைமணி பிரான் என சொல்லிக்கொண்டு அவர் கண்ணுக்கு மட்டுமே தெரிகிற ஒளிதேகி ஒருவர் தரிசனமானார்

அரேபியாவில் பிறந்த முகமது சாலிக் என்ற ஞானி அல்லாஹ் வால் அறிவுறுத்தப்பட்டு திருத்தணியில் குகையில் தவமிருந்து முருகனின் குரு அருளால் ஒளி தேகம் - மரணமில்லா பெரு வாழ்வு பெற்றவர்

அவர் பரமேறும் முன்பு பூமியிலே வாரீசுகளை உருவாக்க இருவரை தேர்ந்தெடுத்தார்

ஒருவர் வள்ளலார் மற்றவர் சாலை ஆண்டவர்

தணிகைமணியார் 9 வயது சிறுவனை வான்வழியாக பல இடங்களுக்கும் அழைத்து சென்று பல பயிற்சிகள் வரங்களை அருளினார்

9 வயதில் பாடிய கந்தர் கோட்ட மணிமாலைதானே அவரது முதல் பாடல் என சீடர்கள் கேட்ட போது ; இல்லை அதற்கு முன்பே திருத்தணி முருகனைப்பற்றி பாடியதுவே என் முதல் பாடல் என்றார் வள்ளலார்

திருத்தணிக்கு வள்ளலாரின் குடும்பத்தினர் யாருமே அவரை அழைத்து செல்லவில்லை . தணிகைமணியாரே வான்வழியாக அழைத்து சென்றவர் இதன் உள் பொருள்

அதுபோலவே சாலையாரையும் 12 ஆண்டுகள் திருப்பரங்குன்றத்திலுள்ள ஒரு குகையில் இருத்தி தணிகையார் பயிற்சி கொடுத்துள்ளார்

இந்த இருவருமே மரணமில்லா பெரு வாழ்வு ; சமரச வேதம் ; சத்திய யுகத்தை வரவேற்க அடித்தளம் இடுதல் ; ஆண்டவர் வருகையை முன்னறிவித்தல் ; ஆட்சிக்கான கொடியை ஸ்தாபித்தல் போன்ற வேலையை தமிழகத்தில் அலுக்கில்லாமல் செய்து வருகிறார்கள்

இவ்விருவருமே தங்கள் தேவைகளுக்கு யாரையும் அண்டியதில்லை

தாங்களே பணத்தை இறைவனிடமிருந்து பெற்று சீடர்களுக்கும் செலவு செய்தார்கள்